அனைத்திந்திய நூல்வரிசை

# கோயில் யானை

(நாடகம்)

ஓம்சேரி என்.என்.பிள்ளை

தமிழாக்கம்
இளம்பாரதி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முன்னுரை

எண்ணிக்கையில் குறைந்த நாடகங்களே எழுதிய நிலையில் மலையாள மண்ணிலிருந்து ஒதுங்கி வாழ்ந்து கொண்டிருந்தாலும், கடந்த முப்பதாண்டுகளில் மலையாள நாடகமேடையில் தலைதூக்கிய நம்பிக்கையூட்டும் புதிய முயற்சிகளைச் சார்ந்து சூட்சுமப் பெட்டகங்களான நாடகங்களை எழுதியும், அந்த நாடகங்களைத் தகுதி வாய்ந்த மேடைகளில் ஏற்றியும், கேரளம் மற்றும் பிற பகுதிகளில் வாழும் மலையாளிகளிடையிலும் புதிய நாடக விழிப்புணர்ச்சிக்குத் தனது ஆற்றல் மிக்க நாடகங்களைப் பரிசாக அளித்திருக்கும் படைப்பாளர்தான் ஓம்சேரி என்ற சுருக்கப் பெயரில் பிரபலமாகியிருக்கும் ஓம்சேரி நாராயண பிள்ளை.

ஓம்சேரியின் நாடகங்களினூடே கடந்த நான்கு நூற்றாண்டு களில் மலையாள நாடகமேடையில் நிகழ்ந்த மறுமலர்ச்சி வரலாற்றின் சுவடுகளைக் கண்டறிய முடியும். ஓம்சேரியின் தொடக்க காலத்து நாடகங்கள் இன்றும்கூட மீண்டும் மீண்டும் மேடையேறிக் கொண்டிருக்கின்றன; ரசிகர்களின் பாராட்டு களைப் பெற்றுக் கொண்டிருக்கின்றன. 'தைவம் வீண்டும் தெற்றித்தரிக்குன்னு' (தெய்வம் மீண்டும் தவறாக நினைக்கிறது), 'உலகுடைய பெருமாள்' என்ற அவரது இரண்டு நாடகங்களுக்கு சென்ற ஆண்டு திருவனந்தபுரத்தில் கிடைத்த மேடையேற்றங்கள், எந்த வகை எழுத்து நடையிலும் அவருக்குப் பழக்கமுண்டு என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. நவீன பரீட்சார்த்த நாடகக் காரர்களுக்கும் ஸி.வி.யும், ஈ.வி.யும் வளர்த்துவிட்ட எள்ளல் நாடகப் பாரம்பரியத்தின் சுவையை அனுபவிக்க விரும்பும் நாடக ரசிகர்களுக்கும் திருப்தி அளிக்கத் தக்க கருவூலங்கள் ஓம்சேரியின் பேனாவிலிருந்து உருவாகியிருக்கின்றன. அவ்வாறு விதவிதமான எழுத்து நடைகளில் அவர் படைத்துள்ள நாடகங்களின் பட்டியலில் பெரிதும் நம்பிக்கையூட்டுவதும், இந்திய அளவில்

தனித்தன்மைகளுடன் அமைந்ததும், விமர்சனங்களுக்கு அப்பாற் பட்டதுமான நாடகம்தான் 'கோயில் யானை' (தேவருடெ ஆன). இதைப் பற்றிக் கூறுவதற்கு முன்பு நாடகாசிரியரைக் குறித்து மேலும் சிலவற்றைக் கூறவேண்டும்.

ஒரு கவிஞராக இலக்கிய வாழ்க்கையைத் தொடங்கிய ஓம்சேரி, தனது படைப்பாற்றலின்மூலம் மலையாள நாடக இலக்கியத்தை வளமுறச் செய்யலாம் என்ற தன்னம்பிக்கையுடன் நாடகப் படைப்புத்துறையில் நுழைந்தார். அவருடைய தொடக்க காலப்படைப்புகள்கூட இதைத் தெளிவுபடுத்துகின்றன. 1957இல் வெளிவந்த 'ஒப்பத்தினொப்பம்' (சரிக்குச்சரி) என்ற ஓரங்க நாடகத் தொகுப்புதான் அவரை மலையாள நாடகத் துறையில் நம்பிக்கைக்கு உரியவராகப் புலப்படுத்தியது. இந்தத் தொகுப்பி லுள்ள நாடகங்கள், மலையாள எள்ளல் நாடகப் பாரம் பரியத்தின் அடையாளங்கள் கொண்டிருக்கின்றன. இந்தத் தொகுப்பைத் தொடர்ந்து 'தைவம் வீண்டும் தெற்றித்தரிக்குன்னு' என்ற புகழ்பெற்ற ஓரங்க நாடகத் தொகுப்பு பல ஆண்டுகள் இடைவெளிக்குப் பின்னர் வெளிவந்தது. எள்ளல் நாடகப் பாரம் பரியத்திலிருந்து ஒரு தனித்தன்மையான இலகு நாடக உத்தியை (சிரிக்கவும் சிந்திக்கவும் செய்யும்) வார்த்தெடுக்க அவரால் முடியும் என்பதை இந்தத் தொகுப்பிலுள்ள நாடகங்கள் புலப்படுத்துகின்றன.

ஆண்டுக்கு ஒரு நாடகமாவது எழுதிவிடும் மலையாள நாடக எழுத்தாளர்களின் மரபுக்கு மாறுபட்டவர் ஓம்சேரி. இவரது நாடகங்கள் ஒவ்வொன்றும் நீண்ட இடைவெளிகளுக்குப் பிறகுதான் வெளியிடப்படுகின்றன. அதுவும் பத்திரிகைகளின் விமர்சனப் பகுதிகளில் பாராட்டுகளுக்கு உள்ளான ஏராளமான மேடையேற்றங்களுக்குப் பின்னர்தான் அவை நூலாக வெளி யிடப்படுகின்றன. நடைமுறையிலிருந்த மேடை நாடகங்களின் சம்பிரதாயங்களுடன் முழுக்க முழுக்க ஒத்துப் போகும் நாடகங்களை எழுதும் நாடக எழுத்தாளர்களின் வழக்கத்தி னின்றும் மாறுபட்டு, நவீன மறுமலர்ச்சிக் கோட்பாடுகளைச் சிந்தனையில் கண்டறிந்து மேடைநாடகங்களுக்குப் புதிய அளவீடுகளை உருவாக்கி நாடகங்களைப் படைத்த காலகட்டம் அது. அப்போது மேடையேறிய அபூர்வமான சில நாடகங்களில் ஒன்று ஓம்சேரியின் 'பிரளயம்'. இது வித்தியாசமான மேடைக் கருத்துக்களைக் கொண்டிருந்ததுடன், புதிய தொழில்நுட்பங் களின் பயன்பாட்டை ஒதுக்க முடியாதவாறு இருந்தது. ஓர்

இயக்குநரின் நம்பிக்கைக்குரிய ஒப்பனையறை நடவடிக்கைகளைப் புறம்தள்ள முடியாதவாறும் இந்நாடகம் இருந்தது. நவீன மேடையுணர்வுடன் செயல்பட்டு வந்த நாடகத்துறையினர், அரங்கமேடையின் சாத்தியக்கூறுகளை முழுவதுமாகப் பயன்படுத்துவதற்குச் செலவழிக்கும் முதலீட்டை மீட்டெடுக்க வகை செய்யும் நாடகங்கள் கிடைப்பதில்லை என்று பரிதவித்துக் கொண்டிருந்த காலகட்டத்தில் வெளியான இந்த நாடகத்திற்கு உற்சாக வரவேற்பு கிடைத்தது.

குறிப்பிட்ட மேடைகளுக்கு என்று மட்டுமல்லாமல், பொதுவாகவே புதிய உத்திகளுடன் நாடகங்களை நடத்த • வேண்டுமென்ற ஆர்வத்துடன் எழுதி, ஏற்கெனவே நிலைத்து விட்ட நாடக எழுத்தாளர்களைக் கவர்ந்திழுத்த பல புதிய உத்திகள் மலையாள நாடகமேடைக்கு ஆரவாரத்துடன் வந்திறங்கிய காலம்தான் அடுத்து வந்த ஆண்டுகள். பிரெக்டின் காவிய நாடக உத்தி, ஆர்த்தாஸின் மரபுவழி நாடக உத்தி, சாமுவல் பெக்கெட்டின் அபத்த நாடக உத்தி ஆகியவை இந்திய நாடக எழுத்தாளர்கள்மீது தாக்கம் செலுத்திய காலம் அது. இதற்கு இணையாகவே, மேற்கத்திய நாடக மாபின் ஈர்ப்பில் மயங்கி அதிஉன்னதமான நமது இந்தியக் காட்சிக் கலைப் ('த்ருச்ய கலா') பாரம்பரியத்தைப் புறக்கணித்து அதனை அவமதிக்கிறோம் என்ற குற்ற உணர்வுடன் சில நாடக எழுத்தாளர்கள் நாடக மேடையில் பொறுப்புணர்வுடன் இக்காலகட்டத்தில் செயல்பட்டனர். இந்த எண்ணப்போக்கு அதிகமாக அலைகளை எழுப்பியது, வலுவான 'காட்சிக்கலைப் பாரம்பரியத்தின்' உடைமையான கேரளத்தில்தான்.

புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் மாற்றி மாற்றி எதிர் கொண்டு எந்த உத்தி என்று தெளிவாகப் புலப்படாததும், பல பாரம்பரிய உத்திகளைக் குறிப்பிட்டு அவற்றை அடிப்படையாகக் கொண்டதுமான நாடகங்கள் அப்போது நாடகமேடையில் தடுமாற்றத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்த நிலையில்தான், ஓம்சேரி தமது 'கோயில் யானை' நாடகத்துடன் மேடைக்கு வந்தார். அதுவும் சாதாரண நாடக எழுத்தாளர்களுக்குப் பழக்கமில்லாத, ஒரு நீண்ட இடைவேளைக்குப் பிறகு. இக்காலகட்ட நாடகாசிரியர்கள் நமக்கு அன்னியமாகக் கிடைத்ததையும் ஏற்கெனவே சொந்தமாக இருந்ததையும் கலந்து புதிய நாடக உத்திகளைக் கண்டறிந்தார்கள். இவ்வாறு வித்தியாசமான உத்திகளைக் கையாளும் திறன் இந்தியாவின் பல பகுதிகளில்

நாடகத்துறையில் மேற்கொள்ளப்பட்டது. பழைய மரபுவழிப் பாரம்பரியத்தின் மேன்மையை அறிந்தவர்களும் மேற்கத்திய அபத்த நாடக அரங்கின் தாக்கம் பெற்றவர்களும் தங்களுடைய போக்குக்கு ஏற்ப புதிய நாடகங்களை மேடையேற்றினார்கள்.

'கோயில் யானை' நாடகத்தை அதிகமாகக் கவரச் செய்தவை இரண்டு தனித்துவங்கள் என்று நான் நம்புகிறேன். ஒன்று, அன்றைய நாடகங்கள் பலவற்றை நாடகச் செயற் பாடுகளிலிருந்து விலக்கி நிறுத்திய 'வீம்புப் பிடிமானம்' என்ற குறைபாடு இந்த நாடகத்தை பாதிக்கவே இல்லை என்பது. இரண்டு, வரையறைக்குட்பட்ட மேடையேற்ற வசதிகள் முதல் சிறப்பான மேடையேற்ற சாத்தியக்கூறுகள் வரை எதையும் பிரயோகிப்பதற்குச் சம்மதிக்கும் நாடோடித் தனத்திற்குச் சமமான தளர்த்தல் போக்கு. இப்போக்கு இந்த நாடகம் வெளிவந்த காலத்திலேயே பிற இந்திய மொழிகளிலும் அறிமுகமாயிற்று என்பதையும் ஒரு தனித்துவமாகச் சுட்டிக்காட்ட வேண்டியிருக்கிறது. இன்றும் இந்த நாடகத்தின் ஆதிக்கம் மங்கிவிடவில்லை என்பதைப் புதிய நாடக முயற்சிகளும் விமர்சனங்களும் நமக்குப் புலப்படுத்துகின்றன.

எழுபதுகளில் மலையாள நாடகமேடையை ஆட்கொண்ட முக்கியப் போக்குகளில் எதனுடன் 'கோயில் யானை' சார்ந்திருக் கிறது என்ற விஷயம் பல ஆண்டுகள் கழிந்தும் இன்னும் ஒரு விவாதப் பொருளாகவே இருந்து வருகிறது. கேரளத்தில் கருத்துப் பிரச்சாரக் கலைகளில் ஒன்றான கதாகாலட்சேபத்தை அடிப்படைக் கருவியாகப் பயன்படுத்தி இந்நாடகம் உருவாக்கப் பட்டிருக்கிறது. இதில் மேற்கத்திய சார்பும் உண்டு; மரபுவழி நாடகமேடையுடன் பற்றுதலும் உண்டு; தனது நாடகக் கருத்து என்பதான ஆளுமையும் உண்டு; இவை எல்லாவற்றுக்கும் அப்பால், இந்தியப் பாரம்பரியத்திற்கு ஏற்ப அபத்தவியல் (அப்ஸர்டிசம்) விமர்சிக்கப்படுகின்ற அடையாளமும் உண்டு. ஒரு காலகட்டத்தில் மிகவும் அதிக மேடையேற்றங்கள் இந்த நாடகத்திற்குக் கிடைத்தன் ரகசியமும் இதுதான். முன்பு கூறிய ஏதாவதொரு போக்கை முக்கியமாக்கிக் கொண்டு இந்த நாடகத்தை மேடையேற்றலாம். இதில் குறியீட்டுத் தன்மையும் அபத்தப்பாங்கிற்கு நிகராக இடம்பெற்றிருக்கிறது. எவ்வாறு இந்த அற்புதம் செயல்படுத்தப்பட்டிருக்கிறது என்பதை ஆராயலாம்.

சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்தல் என்ற நோக்கத்துடனான நாடகப்போக்கைத் தமது உத்தியாக்கிக் கொள்ள ஓம்சேரி

முயற்சியைத் தொடங்கிய காலத்தைப் பற்றி முன்பே குறிப் பிட்டோம். கருத்தாழம் மிக்க தொன்மக் கதைகளை இறுக்கமான சிக்கல்களுடன் நாடகமாக்கி அளிப்பதைவிட, சாதாரண சமூகப் பிரச்சினைகளை எளிய நடையில் நாடகமாக்கி வெளியிடுவது தான் ஓம்சேரிக்கு விருப்பமானது. நாடகத்தைப் பார்ப்போர் மனங்களில் சிந்திக்கத் தூண்டும் ஆற்றல் மிக்க படிமங்களை உருவாக்குவதில் ஓம்சேரி வெற்றியடைந்தார். சிறப நுணுக்கத் திலுள்ள நளினம், எடுத்துக்கொண்ட பிரச்சினையைப் பார்வை யாளர்கள் ஏற்றுக்கொள்ளத்தக்க முறையில் பரிமாறும் கெட்டிக் காரத்தனம், உரையாடல்களைக் கையாளும் விதம், தனித் தன்மையான உரைநடையில் அடிநாதமாக தழுவிச் செல்வதான திறமை ஆகிய இவையெல்லாம்தான் இன்றைக்கும் அவருடைய நாடகங்களை ரசிகர்களிடையே கொண்டு செல்கின்றன. வெடிச் சிரிப்புகளுக்குப் பதிலாகப் புன்சிரிப்புகளைக் குறிவைத்துதான் ஓம்சேரி நாடகங்களைத் தயாரித்திருக்கிறார். கேலிக்குரியவன் சிரித்து அனுபவிக்கும் அளவுக்கு இவரது நாடகங்கள் அமைந்துள்ளன.

அடுத்து வந்த காலங்களில் அமையப்பெற்ற பக்குவ வளர்ச்சியின் பலன்தான் 'கோயில்யானை'. இதற்கு இடைப்பட்ட காலத்தில் அவர் நாடகம் எழுதுவதில் தீவிரமாக ஈடுபடவில்லை யென்றாலும் நாடக மேடையேற்றத்தில் நாட்டம் கொண்டவர் என்ற நிலையிலும், பார்வையாளர் என்ற நிலையிலும் நாடகத் துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். முன்பு கூறிய வளர்ச்சியின் காலகட்டத்தில் ஓம்சேரியைப் பெரிதும் ஆட் கொண்டவை புதிய உத்திகள் மட்டுமல்ல, மாறி மாறி வந்த மேடையேற்றம்—ரசிகத்தன்மை பிணைப்பு முறைகளும்தாம். சுருக்கமாக, இருபது ஆண்டுகளில் மலையாள நாடகமேடையில் மேடையேற்றம்—ரசிகத்தன்மை ஆகியவற்றின் பிணைப்பில் நேர் மாற்றங்களின் சாரத்தை முழுவதுமாக உள்ளேற்று, அதன் முன்னோக்கிய வளர்ச்சிக்கு ஓர் எழுத்தாளனின் பங்களிப்பு என்னவாக இருக்கவேண்டும் என்று நுணுக்கமாகப் புரிந்து கொண்ட ஒரு நாடகப் படைப்பைத்தான் 'கோயில் யானை'யின் ஆசிரியரிடம் நான் காண்கிறேன். ஓர் எழுத்தாளனிடத்தில் நாடகம் நடத்துபவனும் நாடகத் தயாரிப்பாளனும் நாடக ரசிகனும் ஆக எல்லாரும் ஒன்று கலந்து இருக்க வேண்டும் என்பது புலனாகிறது. நாடகமேடையின் மூன்று நிலைகளையும் (எழுத்தாளன், தயாரிப்பாளன், ரசிகன்) ஒன்றிணைக்கும் ஒரு

காட்சிச் செழுமைக்கு ஓம்சேரி முயன்றார்.

சர்ச்சை எழுப்பிய ஒரு யானைதான் கேசவன். கோவில் உற்சவங்களில் விக்கிரகத்தைச் சுமந்து முக்கிய இடத்தைப் பெற்றிருந்த கேசவன், விக்கிரகத்தையும், அதைச் சார்ந்து பக்கத்தில் இருந்த பூசாரியையும் மற்றவர்களையும் தரையில் கவிழ்த்துவிட்ட மனப்போக்கில்தான் இந்நாடகத்தின் கதை தொடங்குகிறது. அதைத் தொடர்ந்து பதுங்கி ஒளிந்துகொண் டிருக்கும் மாவுத்தன் சங்குநாயர் தடிமரம் தூக்குவதற்குக் கேசவனைப் பயன்டுத்த முனைந்தபோது யானை வீம்பு காட்டத் தொடங்கியதால் நாடகத்தில் பிரச்சினை தொடங்குகிறது. ஆனால் நாடகத்தைப் பொறுத்தவரை அதெல்லாம் பூர்வ கதைகளாகும். கதாகாலட்சேபக்காரனான பாஸ்கரன், கேசவனின் சோகக் கதையை (கோயில் யானையின் கதை) கதாகாலட்சேப வடிவில் மேடையேற்றுவதற்கான முயற்சியில் தீவிரமாக ஈடு பட்டிருப்பதாக நாடகம் தொடங்குகிறது. நாடக ஒத்திகை நடப்பது ஒரு கோயில் மைதானத்தின் ஆலமரத்தடிச் சூழலில். கதாநாயகனான கேசவனின் உடல்நலக்குறைவை உணர்த்துகின்ற தளர்ச்சியைப் புலப்படுத்தும் சூழல். கண்ணுக்குத் தெரிகின்ற சூழலுக்கு அப்பால் நாற்சந்தி, படகுத்துறை, கள்ளுக்கடை ஆகிய வற்றைப் பற்றியெல்லாம் நாடக எழுத்தாளர் குறிப்பிடும்போது கேரளத்து கிராமியச் சூழலின் சகல தனித்தன்மைகளும் வாசகனின் எண்ணத்தில் தெளிவாக எழும். கேரளத்தில் விழாக்காலங்களில் கதாகாலட்சேபம் ஒரு அத்தியாவசிய நிகழ்ச்சியாகக் கருதப்பட்ட காலகட்டத்தில்தான் இந்த நாடகம் எழுதப்பட்டிருக்கிறது. எள்ளல் நடையைப் பயன்படுத்தும் அந்த ஒத்திகை மேடை அந்தக் காலகட்டத்துப் பிரயோகத்தின் எல்லா உணர்வுகளையும் உட்படுத்தியிருப்பதை அனுபவத்தின் மூலம் புரிந்துகொள்ள முடியும். கேசவனின் நலமின்மை பற்றிப் பேசும் கதாகாலட்சேபக்காரர்கள் வந்து சேர்வதற்கு முன்பு, குடித்து விட்டுத் தள்ளாடி மேடைக்கு வந்துசேரும் மாவுத்தன் சங்கு நாயர்தான் நாடக விதையை விதைக்கிறார். அரசியல்வாதி, கிராம நிர்வாக அதிகாரி, நாட்டுவைத்தியத்திலும் அலோபதி முறை யிலும் சிகிச்சை முறைகளைக் கூறும் ஜோசியர் கிட்டுப்பணிக்கர் மற்றும் டாக்டர் ஆகியோர் அடுத்தடுத்துத் தொடர்ந்து வந்து சேரும்போதுதான் எளிதாக ஆரம்பத்தில் தோன்றிய யானைப் பிரச்சினை சிக்கல் நிறைந்த பெரும் பிரச்சினையாக மாறுகிறது. யானையின் அசௌக்கியத்தைப் போக்குவதற்குச் சிகிச்சை

முறைகளை நிர்ணயிக்கும் டாக்டரும் கிட்டுப்பணிக்கரும் எதிரெதிராகி முரண்பாட்டு எல்லைக்குச் செல்ல நேரும்போது, இதற்குச் சாட்சியாக நிற்கும் கேசவன்/யானை அவர்களைப் பிடித்து விழுங்கிவிடுகிறது. கிட்டுப்பணிக்கர் மற்றும் டாக்டரின் வாதப்பிரதிவாத உரையாடல் பகுதிகள் கடுமையான பசியின் காரணமாக சூனியமாகிக் கிடக்கும் யானையின் வயிற்றிலிருந்து உரக்கக் கேட்கின்றன. உடல்நலக்குறைவிற்குக் காரணம் பசி என்று தெரிந்தவுடனேயே திரை இறங்குவதற்கு பதிலாக, யானையின் சாணத்துடன் வெளியே தள்ளப்பட்ட கிட்டுப் பணிக்கரும் டாக்டரும் நிர்வாணமாக மேடையில் தோன்றும் காட்சியை பார்வையாளர்கள் தவிர்ப்பதற்காகத் திரை இறக்கப் படுவதாக நாடகம் முடிவடைகிறது.

பெரிதும் யதார்த்தக் கலவையுடன் கதாபாத்திரங்கள் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொள்வதற்கிடையே ஒரு யானையின் படிமத்தை மேடைக்குக் கொண்டுவந்து, அதைக் கதாபாத்திரங்களுக்குச் சமமாக மேடையில் உலவும் ஒரு கதாபாத்திரமாக்கி 'உச்சகட்ட' திருப்புமுனை வரையிலும் இயங்கச் செய்ததன் மூலம் மிகப் பெரிய கலைநுட்பத்தை ஓம்சேரி வெளிப்படுத்தியிருக்கிறார். கேசவன் என்ற உயிருள்ள யானை ஒன்று உண்மையாகவே இந்த நாடகத்தில் பங்குகொண்டிருக்கிறது என்பது போன்ற உணர்வை நாடகம் பார்ப்பவர்கள் உணர்ந்து கொள்ளும் வகையில் அந்த நுட்பம் செயலாக்கப்பட்டிருக்கிறது. வித்தியாசமான உத்திகளின் ஒன்றிணைப்பு செயல்பட்டிருக்கிறது என்ற உணர்வையும், இது 'அபத்த' நாடகப் பிரிவைச் சேர்ந்தது என்ற சிந்தனையையும் ஒரே சமயத்தில் பார்வையாளர்களிடம் இந்தக் கலைநுணுக்கம் உண்டாக்குகிறது. ஆனால் பரஸ்பரம் முரண்படும் மாற்றங்களாகி, அது பார்வையாளனின் ரசனையில் குறுக்கிட்டுத் தொந்திரவு செய்யவில்லை. கேசவனின் வருகை மேடையில் தவிர்க்கப்பட முடியாதது என்ற காட்சியமைப்பைப் படைத்ததன் மூலம் ஓம்சேரி தமது அரங்கச் செய்நேர்த்தியைப் பெரிதும் புலப்படுத்தியிருக்கிறார். இவ்வளவு விறுவிறுப்பு நிறைந்ததும், எதிர்பார்ப்புக்கு அனுசரணையாக நிகழ்வதுமான காட்சித் தொடக்கத்தை நாடகமேடையில் அபூர்வமாகத்தான் காண முடியும்.

நீங்கள் படித்து ரசிக்க இருக்கும் நாடகம் இது. நாற்பது ஆண்டுகளாக மலையாள நாடக அரங்கில் செயல்பட்டுவரும் நான் முன்னுரையாக இவ்வளவும் கூறியது உயர்வு நவிற்சியை

ஒதுக்கிவிட்டுத்தான் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஒவ்வோர் உத்தியையும் தனித்தனியே எடுத்து அதனைக் கையாண்டதன்மூலம் என்னென்ன அற்புதங்களை இதன் ஆசிரியர் சாதித்திருக்கிறார் என்று விளக்க நான் முனையவில்லை. சுருக்கமான ஒரு முன்னுரையில் அது சாத்தியமும் இல்லை அல்லவா? மலையாள நாடகங்களைப் படித்தும் பார்த்தும் ரசிக்கும் எந்த ஆர்வலருக்கும் தெளிவாகப் புரியும் விஷயம் அது. எனவே இந்த முன்னுரையை இதற்கு மேல் நீட்டிக்கவில்லை. நேரடியாக உங்களை நான் நாடகத்திற்கு அழைத்துச் செல்கிறேன்.

டி.சி. 4/1132 பி.கே. வேணுக்குட்டன் நாயர்
கவடியார் அஞ்சல்
திருவனந்தபுரம் - 695 003

# கதைமாந்தர்கள்

பாஸ்கரன்

கம்பர்

பாகவதர்

மிருதங்கக்காரர்

சங்குநாயர்

தலைவர்

கேசவன் யானை

கிராம அதிகாரி

டாக்டர்

ஃபோட்டோகிராபர்

கிட்டுப்பணிக்கர்

# காட்சி 1

*(ஒரு கோயிலின் பின்புறத்தில் ஆலமரத்தடியின் மேடைத் திண்டும் அதைச் சார்ந்த சூழலுமே நாடக அரங்கம். ஓர் ஆள் உயரத்தில், நசிந்து தகர்ந்த அடிமரத்துப் பகுதி மட்டுமே ஆலமரத்தில் எஞ்சியிருக்கிறது. அங்குமிங்கும் இடிந்து சிதைந்த மேடைத்திண்டின் நடுவில் அந்த அடிமரம் நின்று கொண் டிருக்கிறது. நாடக மேடைக்குப் பின்புறம் வலப்பக்கத்தை ஒட்டி மேடைத்திண்டு (நாடகம் பார்க்கும் அவையோர்க்கு அது வலப்பக்கம்). மேடைத் திண்டின் பின்புறமாக, ஏறத்தாழப் பின்திரைக்கு இணையாக எட்டடி அளவுக்கு உயரமான மதில் சுவர். அது மேடையின் நடுப்பகுதியைச் சார்ந்து சிறிது பிளவு கண்டிருக்கிறது. யானையின் முகபடாம் மாதிரி, ஏறத்தாழ முக்கோண வடிவில் அந்தப் பிளவு. பிளவின் மேல்பாகம் நான்கைந்தடி அகலம்; கீழ்நோக்கி வரும்போது அகலம் படிப்படியாகக் குறுகி தரையை எட்டும்போது இரண்டடி அகலம். அது ஒரு அங்கீகாரிக்கப்பட்ட குறுக்கு வழியாகப் பழக்கப் பட்டிருக்கிறது. மேடையிலிருந்து சுமார் முந்நூறு அடி தூரத்தில் இடது பக்கத்தில் கோயில்; வலது பக்கத்தில் சிறிது தொலைவில் நாற்சந்தி, படகுத்துறை, கள்ளுக்கடை முதலியன. அவை எதுவும் மேடையினின்றும் பார்க்க இயலாதவை என்ற போதிலும் அரங்கத்தில் கேட்கும் இரைச்சல்களுக்கு அவைதாம் பின்னணி.*

நாடகம் தொடங்கும்போது —

*பாஸ்கரன் மேடைத்திண்டில் அமர்ந்து ஒரு கதா காலட்சேபத்தின் வாசகங்களைப் படிக்கும் குரலில் ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கிறான். இடை யிடையே கையிலுள்ள நோட்டுப் புத்தகத்தைத் திறந்து பார்த்து அவ்வப்போது சந்தேகத்தை தீர்த்துக் கொள்கிறான்.*

*(இடது பக்கத்தில்சிறிது தொலைவில் கம்பரின் விற்பனைக் குரல்:)*

*"முந்திரிப்பருப்பு, தோல்செருப்பு, கம்பராமாயணம், பிண்டத்தைலம், சவுரிமுடி, லாட்டரி சீட்டு, குதிகால் கட்டைச் செருப்பு, காமசூத்திரம், பகவத்கீதை, காதுக் குறும்பி, கண் மை, தேர்தல் அறிக்கை, பஞ்சாங்கம், பல்பொடி, தீர்த்த யாத்திரை டிக்கெட்..."*

*(குரல் கொடுத்தவாறே கம்பர் அரங்கத்தை அடை கிறார். உடம்பு முழுக்க பல விற்பனைப் பொருள் களின் விளம்பரத் துணிகள் கட்டித் தொங்கவிடப்பட் டிருக்கின்றன. பாஸ்கரன் உண்மையாகவே கம்பரைக் கவனிக்காமல் ஒத்திகையைத் தொடர்கிறான். கம்பர் பாஸ்கரனுக்கு அருகில் போய் நின்றுகொண்டு கதாகாலட்சேபம் செய்வது மாதிரி:)*

*கம்பர் :* தீர்த்த யாத்திரை டிக்கட்டுகள் இன்னும் கொஞ்சம் தான் பாக்கி இருக்கிறது. உண்டும் உறங்கியும் நிலையிலா பௌதிக சுகானுபோகங்களில் மூங்கி மூழ்கி மனித வாழ்க்கையை வீணாக்காமல் தெய்வ பாரதத்தின் ஆன்மீக சைதன்யம் கொண்டு மாசு மருவற்ற பேரொளி பெற்றிலங்கும் காசி, ராமேஸ்வரம், பூரி, ரிஷிகேசம் முதலான புண்ணியத் தலங்களை தரிசித்து சாஸ்வத முக்தி மார்க்கம் சம்பாதித்துத் திரும்பி வரலாம். வெறும் இருநூறு ரூபாய் செலவில் வியாபாரம், விவகாரம், திருமணம், தேர்தல், சத்ருமித்ர சம்ஹாரம் ஆகியவற்றில் உங்கள் வெற்றியை உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள்...

*பாஸ்கரன் :* *(பொறுமை இழந்து)* கொஞ்சம் நிறுத்துங்க, கம்பரே. இனிமே நீங்க ஒத்திகைக்கு வரல்லேன்னா'நான் தீர்த்த யாத்திரை போகவேண்டியதுதான். தனியா ஒத்திகை பார்க்கலாம்னு பார்த்தால் அதுக்கும் சம்மதிக்கலே. கதாகாலட்சேப சீசன் தொடங்கிடுமில்லையா!

*கம்பர் :* *(உரக்கச் சிரித்து, அவனது கோபத்தைத் தணிக்கும் முயற்சியில்)* அதனாலேதானே வாத்தியாரே, இன்றைக்கு ஒத்திகைக்கு ஆயத்தமாக வந்திருக்கேன். கோயிலுக்குப் போய் நம்ம மிருதங்கக்காரரையும் பாட்டுக்கார பாகவதரையும் கூப்பிட்டேன்.

பாஸ்கரன் : அப்படீன்னா அவங்க எங்கே?

கம்பர் : பின்னாலே வர்றாங்க வாத்தியாரே!
(விளம்பரத் தட்டிகளைக் கீழே இறக்கி வைக்கிறார்)

பாஸ்கரன் : (நாடகப் பிரதியின் பக்கங்கள் புரள்கின்றன) ...ம்...

கம்பர் : கதாகாலட்சேபத்தை வெளுத்து வாங்கணும், தெரியுதா? நாலு சீசன் நடந்து முடிஞ்சாலும் அதுக்குப் பிறகும் புக்கிங் வந்துக்கிட்டே இருக்கணும். ஆரம்பப் பகுதி நல்ல பிரமாதமா புதுமையா இருக்கணும். பாட்டுங்க காதிலே அப்படியே ஒலிச்சிக்கிட்டே இருக்கணும். நம்ம கோயில் கலைஞருங்க நல்ல கெட்டிக்காரங்க. புக்கிங் ஆச்சுன்னா அவங்களுக்கு கோயில்ல இருந்து நாலு மாசம் விடுமுறை, அடியேனுக்கு இந்த விதவிதமான வேலைங்க நாலஞ்சு மாசத்துக்குத் தாங்கும்.

(ஆர்மோனியமும் மிருதங்கமுமாக பாகவதரும் மிருதங்கக்காரரும் - கோயில் கலைஞர்கள் - நுழைகிறார்கள்.)

பாஸ்கரன் : வணக்கம்! வாங்க, வாங்க, இன்னிக்கு நாம ஒத்திகையை முழுசா ஒரு தடவை பார்த்திடணும்.

பாகவதர் : நாங்க தயார். பூஜை முடிஞ்சிருச்சின்னா அப்புறம் எப்பவுமே ரெடிதான். ஆனா, இந்தக் கம்பர் கிடைக் கணுமில்லே?

பாஸ்கரன் : (கம்பரிடம்) இனிமே ஒத்திகையை தயவுசெய்து நிறுத்தக்கூடாது.

கம்பர் : (கலைஞர்களிடம்) இனிமே ஒத்திகை ஒருநாளும் நிற்கக் கூடாது. சொல்லிட்டேன்.

பாகவதர் : சரி, சரி. நீங்க சொல்றதைக் கேட்டா என்னமோ எங்க மேலேதான் குத்தம்னு தோணும். ஒத்திகை இல்லேன்னா பாட்டு ஒருபக்கம் கொட்டு ஒரு பக்கம்னு ஆயிரும்.

கம்பர் : அப்படீன்னா நாம ஆரம்பிச்சிருவோம், வாத்தியாரே.

பாஸ்கரன் : ஆரம்பிச்சிருவோம்.

(பாஸ்கரன் நடுவிலும், கம்பர் இடது பக்கமும், பாகவதர் வலது பக்கமும், மிருதங்கக்காரர் ஆலமரத்

திண்டிலும் ஆயத்தமாகி நிற்கின்றனர்.)

கம்பர் : வாத்தியாரே, ஒரு விஷயம். நிகழ்ச்சி ஆரம்பிக்கிறதுக்கு முன்னாடியுள்ள அறிவிப்பில் அது சம்பந்தமா எனக்கொரு அபிப்பிராயம் சொல்லணும். திரையைத் தூக்கறதுக்கு முன்னாலே ஒரு ஜால்ரா.

(முன்பக்கமாக அடியெடுத்து வைத்து பெரிய ஜால்ராவை அடிப்பதுபோல் நடித்தபடி)

டீம்...
கதாகாலட்சேபம்
டீம் டீம்...
கோயில் யானை
ச்லீங்...
கதாபிரசங்கி—பாஸ்கர்குமார் பி.ஏ.
கிடிகிடி, கிடிகிடி...
கதையும் பாடலும்—ஓம்சேரி
பூம்...
பின்னணி இசை—கானபூஷணம் கொச்சாம்பள்ளி மதன்
டீம்...
பாலக்காடு பத்மநாபன்
டீம்
(உரக்க) கம்பர்—ராமகிருஷ்ணன்
ச்லீங்...
கோயில் யானை

(பாஸ்கரனிடம்) நான் சொன்னது எப்படி இருக்கு வாத்தியாரே?

பாஸ்கரன் : உக்கிரம்! ஆனால் இந்த கதாகாலட்சேபத்திற்கு வேண்டாம்.

கம்பர் : அப்படியானால் அடுத்ததற்குப் போதும்.

பாஸ்கரன் : சரி, தொடக்கப் பாட்டை நாம முதலிலே ஆரம்பிப்போம்.

கம்பர் : (பாகவதரிடமும் மிருதங்கக்காரரிடமும்) தொடக்கப் பாடல்கள் ரெண்டு இருக்கு. அதை ஞாபகம் வச்சிக்கிடணும்.

*பாஸ்கரன் :* உற்சவங்கள், மதவிழாக்கள் முதலான நிகழ்ச்சிகளுக்குத் தொடக்கப்பாட்டு கணபதி தோத்திரம்.

*பாகவதர் :* 'குணகணங்கள் நிறைந்தவனே போற்றி.'

*பாஸ்கரன் :* ஆமா.

*பாகவதர் :* அவன் வாட்டசாட்டம், தெரியுமா? ராக மாலிகைக்கு ஒத்துவர்றாப்பிலே பாட்டு.

*மிருதங்க. :* அது மட்டுமில்லே, கதை யானையைப் பற்றி; தொடக்கப் பாட்டு கணபதியைப் பற்றி, பக்திமயமான பாட்டு. இதைத்தான் பொருத்தம்னு சொல்றது.

*கம்பர் :* இன்னொரு தொடக்கப்பாட்டு, 'வந்தோம் வந்தோம் வந்தோம் நாங்கள்.' இது அரசியல் மாநாடுகள், ஆண்டுவிழாக்கள், இலக்கியவாதிகளோட மணிவிழா முதலானவைகளுக்கு.

*பாகவதர் :* அதுவும் நல்லா எடுபடும், தெரியுமா? நல்ல புரட்சி, ஆவேசம், போராட்டம், சோஷலிசம்—எல்லாமே இருக்கு.

*கம்பர் :* ஒரே கதைக்கு பார்வையாளர்களோட ரசனைக்கு ஏற்ற மாதிரி இரண்டு விதமான தொடக்கப் பாடல்கள். இப்படி ஒரு ஐடியாவை இதுவரைக்கும் யாரும் உபயோகிச்சதே இல்லை. ஐடியான்னு சொன்னேன்ல, வாத்தியாரோட கைவண்ணமும் இதிலே இருக்கு.

*மிருதங்க. :* பக்தர்களுக்கு பக்தி. புரட்சியாளர்களுக்குப் புரட்சி.

*பாகவதர் :* இன்னிக்கு என்ன? பக்தியா புரட்சியா?

*பாஸ்கரன் :* இன்னிக்கு பக்தியா இருக்கட்டும். ட்யூன் கிளாசிக்கலா இருக்கிறதனாலே ஒத்திகையும் கச்சிதமா இருக்கணும். இப்போ தொடங்குவோம்.

*(பாஸ்கரன் தொடங்குகிறார். மூவரும் சேர்ந்து பாடுகிறார்கள்.)*

*(பொருந்தும் ராகம்: தாளம்:)*

**குணகணங்கள் நிறைந்த புரிசடையுடையோன்தன்**
**தாள்பணிந்து அருள்பெற்றோன், பார்வதிரமணன்**
**கருணைவடிவம் பொருந்தி விளங்கிய**

***இளமை உருவினன் மலைமகள் உடனுறைவோன்***
***யானைவேடம் பூண்டொரு நாள்***
***பல்வகை விலங்கினம்***
***சூழ அடர்காடு தன்னில்***
***நன்றே விளையாடித் திரிந்திருந்த வேளையில்***

*(ராகம் தாளம் மாற்றம்)*

***பெருகிய தேன்மலர் வாசனை கொண்டும்***
***நறுமணத் தென்றல் வருகை கொண்டும்***
***சூழவே இளந்தளிர் வாய்த்தது கொண்டும்***
***குயிலின் இன்னிசை கொண்டும்***
***சரளராக வரிசைகள் கொண்டும்***
***தாமரை மலர்ச்சரப் பெருக்கம் கொண்டும்***
***பரவச மனத்தனாய் அணைத்துடனும்***
***நலமெலாம் ஒன்றிணைந்த நேரம்***
***விரைந்து வந்து பிறந்து விளங்கிய***
***இளஞ்சூரியர் கோடி சமானன்***
***யானைமுகத்தானாகிய தெய்வதமே***
***வரம் தந்தருள்க வணங்கி நின்றேனே!***

*மிருதங்க. : ட்யூன் எப்படி இருக்கு?*

*பாஸ்கரன் : சொல்லணுமா! நல்லா அமைஞ்சிருக்கு.*

*மிருதங்க. : ஒரு ராகத்திலேருந்து இன்னொண்ணுக்குப்போய் மறுபடியும் அதே ராகத்துக்கு வந்து சேர்றது இருக்கே, அபாரம்! அபாரம்!*

*கம்பர் : இது அரங்கேறினா பாகவதரை சினிமாக்காரங்க தேடி வருவாங்க.*

*மிருதங்க. : அவங்களுக்கெங்கே கிளாசிகல் தெரியும்? பேய் பிடிச்சவன் கத்துற மாதிரி கூப்பாடு போடணும், அதோட சேர்ந்து கூப்பாடு போட பத்திருபது வாத்தியங்கள்.*

*பாஸ்கரன் : சரி தொடங்குவோம். (கதாகாலட்சேபம் தொடங்கு கிறது)*

*அன்புள்ள அவையோருக்குப் பணிவான வணக்கம். நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் கால கட்டத்தின் அநியாயமும் பயங்கரமுமான முகத்தின் மீது*

ஒளிபாய்ச்சும் வெளிச்சம்தான் இன்றைய கதாகாலட்சேபத்தின் கதைக் கருத்து. எவரும் எவரையும் சுரண்டிப் பிழைக்காத, மானிட மகத்துவத்தை மதிக்கின்ற ஒரு சுதந்திர நாட்டை அவர்கள் கனவு கண்டார்கள். கண்ணீரினால், வியர்வையினால், ரத்தத்தினால் அந்தக் கனவு அவர்களுக்கு நனவாயிற்று. சுதந்திர சொர்க்க சாம்ராஜ்யத்திற்கு நாம் உரிமை பெற்றவர்களானோம். ஆனால் பேதங்களும் சுரண்டல்களும் நாட்டிலிருந்து மறைவதற்குப் பதிலாக அவை புதுப்புது வேடங்கள் அணிந்து நாட்டைத் தகர்த்துக் கொண்டிருக்கின்றன. பூதங்களாக மோகினிகளாக உருமாறிக் கொட்டமடிக்கின்றன. கீசகர்கள் தர்ம புத்திரர்களாக உருமாறி ஒளிவீசுகிறார்கள். முகங்களை விட அதிகம் முகமூடிகள். சமுதாயத்தில் ஒட்டுண்ணிகள் தடித்துக் கொழுக்கின்றன. அவை உருவாக்கிய நீதிகளுக்கும் நியமங்களுக்கும் இரையாகி வாயில்லா ஜீவன்கள் செத்துப்பிழைக்கின்றன. ஆதரவு எதுவும் இல்லாத அந்த வக்கற்றவர்களைப் போல வாழ்நாள் முழுக்க விக்கிரகத்தைச் சுமந்தும், பாரங்களைச் சுமந்தும், செத்தும் சாகாமலும் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு கஜராஜனின்—யானையின் கதையைத் தான் கதாகாலட்சேப வடிவத்தில் இன்று உங்கள் முன்னால் நாங்கள் நடித்துக் காட்டப்போகிறோம்.

இப்போது நீங்கள் கேட்கலாம்: "இலக்கியங்கள் மனிதனின் கதையைப் பாடுபவை" என்றல்லவா மகாகவி குமாரனாசான் கூறியிருக்கிறார், அப்படியிருக்கையில் மனிதனைப் புறக்கணித்துவிட்டு யானையின் கதையைப் பாடுவது முரண்பாடானது அல்லவா?

(பின்பாட்டுக்காரரிடம் ஆரம்பிப்பதற்கான சைகையைக் காண்பித்துக்கொண்டு)

**"முரண்பாடில்லா கதையிது மனித**
**இயல்பு காட்டவுள்ள கண்ணாடியாம்.**
**அதிலெங்காயினும் உங்கள் உருவமும்**
**பிரதிபலிக்குமெனில் மன்னித்து விடுங்கள்.**
**கபடநாடகத்தினுள்ளே சத்தியத்தை நினைத்து**
**இங்கு நாம் சற்றே சிரிக்க வைத்தால்**

***சிரிப்புடன் சிந்தனை அலைகளும் சேர—
சிதைந்து விழுந்திடலாம்
எத்தனையோ பொய் முகங்கள்!"***

*சிரிப்பினூடே சிந்திக்க வைக்கவும் வேண்டும். கபடவேடதாரிகளானாலும்கூட சுயமாகச்சிந்திக்கத் தொடங்கினால் பொய் முகங்கள் தாமாகவே விலகும்.*

***"கண்ணாடி காணும்வரைத் தமது முகம் மிக
மேன்மையென்றே நினைத்திருப்பார் குரூபிகள்"***

*என்பதுதானே அனுபவ மொழி. சொந்த முகம் அவ்வளவு நன்றாக இல்லை என்பதைக் குரூபிகளுக்கு அறிவுறுத்த வேண்டும். முகத்திற்கு நேராகக் கண்ணாடியைப் பிடித்துக் காண்பிக்க வேண்டும். இதனால் அவர்கள் ஒருவேளை கண்ணாடியைத் தூக்கி எறியலாம்; அல்லது, முகம் அழகாயிருக்கிறதென்ற அவர்களுடைய அகந்தை அழியலாம். இரண்டுமே நல்லதுதான். (இரண்டடி முன்னே நகர்ந்து சென்று) 'கொச்சாம்பள்ளி கேசவன்' உங்களுக்கெல்லாம் ஏற்கெனவே அறிமுகமானவன்தான், கோயிலிலே இருக்கிற அந்த யானைதான். கேசவன் கேசவனாக ஆகிறதுக்கு முன்னாலே பெயரில்லாத ஒரு யானைக்குட்டியாக இருந்தது. மலைத்தொடரின் அடர்ந்த பள்ளத்தாக்கில் இயற்கையின் செல்லப் பிள்ளை போலத் தன்னிஷ்டப்படி அலைந்து திரிந்த ஒரு யானைக்குட்டி.*

***"சூதுவாதுகள் ஏதுமறியாச் சிறுகுழந்தை
வடிவிலவன் அக்காட்டினில் சுற்றித் திரிகையில்
கொடிபடர்ந்த குழிக்குள்ளில்,
மனிதரின் வஞ்சனையால்
மாயவலையாம் பாழ்குழியில்
அவன் விழுந்தமிழ்ந்தான்."***

*கொடிப்பின்னல் என்று நினைத்தது செடிக்குவியல் மூடியிருந்த கண்ணி வைத்த குழியாயிருந்தது. அவன் அந்த மரணக் குழியில் கிடந்து கதறியழுதான்.*

***"அடிமைத்தனத்தில் ஆழ்ந்த மானுட
உயிர்களின் தேம்பியழும் குரலைப் போலவே***

**கேட்டது அவ்வழுகை பூமி நெடுகிலும்**
**எதிரொலித்ததே அது தொடுவானத்திலும்."**

அதைப்போன்றே பல தீன அழுகுரல்கள் கேட்டுத் தழும்பேறிய காதுகள் இந்த உலகத்தினுடையது என்பது அவனுக்குத் தெரியாது.

**"அழாதிரு குழந்தாய் அடிமைத் தனமாம்**
**கரைகாணாக் கடலில் இன்று இவ்விதமாய்**
**அலைந்து தத்தளிக்கின்றன**
**ஆயிரமாயிரம் தோணிகள்**
**அலையை எதிர்த்து மூழ்கியும்**
**மூழ்காமலும் அவையெலாம்."**

அடிமைகளாகப் பழக்கப்பட்ட யானைகள் இடம் வலம் நிற்க, சதிக்குழி தோண்டியவர்கள் முன்னும் பின்னும் நிற்க, காட்டினுடைய அந்தச் செல்ல மகனை நாட்டுக்குக் கொண்டுவந்தார்கள். காட்டு எல்லை யிலிருந்து நாகரிகக் காட்டெல்லைக்குள்ள நெடும் பயணத்தை அவன் அவ்வாறாக ஆரம்பித்தான். அடிமைத்தனம்தானே முதல் படி. ஏலத்திற்கு விடப் பட்ட அந்த யானைக்குட்டியை அதிக விலைக்கு ஒரு செல்வந்தர் வாங்கினார். கொச்சாம்பள்ளி தெய்வத்தின் அனுக்கிரகத்தினால் தனக்குக் கிடைத்த சௌபாக்கியங்களுக்குக் கைம்மாறாக அவர் அந்த யானைக்குட்டியைக் கோயிலுக்குக் கொடுத்து விட்டார். அவ்வாறாக அவன் அந்தஸ்துள்ள ஜமீன் தாரின் அடிமையானான். ஜமீன்தார் அவனுக்குக் கேசவன் என்று பெயரிட்டார். சிறைக் கைதிகளுக்கு எண்கள் கொடுப்பார்களே அதைப்போல.

**"ஊரில்லாதிருந்தவனுக்கு ஊர் உண்டானது போல்**
**பேரில்லாதிருந்தவன் ஆதிகேசவன் என்றானான்."**

('ஊரில்லாதிருந்தவனுக்கு' என்ற வார்த்தையைப் பாடத் தொடங்கும்போது சற்றுத் தொலைவில் கள் குடித்ததால் நாக்குழறிய மாவுத்தன் சங்குநாயர் உரக்கப் பேசிக் கொண்டு வரும் ஓசை வலதுபுறம் கேட்கிறது:) "சீ சீ, நிறுத்துடீ, என்னடீ நீ! பத்து மரக்கா நெலம், ஆறரை ஏக்கர் மனையிடம் எல்லாத்துக்கும் சொந்தக்காரனா இருந்தவண்டீ இந்த சங்கு நாயரு-

இந்தா... எல்லாம் போச்சு. நீ யாருடா என்னைக் கேக்குறதுக்கு? சூரிய சந்திரர்கூட இந்த சங்குநாயருக்கு எதிரிலே கைகட்டி வாய்பொத்தி நிப்பாங்கடி, பிச்சைக்கார நாயே! ஒரே அடியிலே ஒன்னோட மண்டையைப் பொளந்திருவேன்." (சங்குநாயரின் குரலைக் கேட்டதும் எல்லாரும் பாட்டை நிறுத்தி பொறுமை இழந்த நிலையில் முணுமுணுத்துக் கொண்டு நிற்கிறார்கள்.)

கம்பர் : வாத்யாரே, நான் இடத்தைக் காலிபண்றேன். இல்லாட்டி வேர்க்கடலையைக் கடனாக் கொடுக்கணும்.

மிருதங்க. : ஒத்திகை இன்றைக்கு முடிஞ்ச மாதிரிதான்! குடிச்சித் தள்ளாடிக்கிட்டு வர்றான்.

பாஸ்கரன் : எந்த கலாட்டா நடந்தாலும் சரி, ஒத்திகை நடக்கிறது மட்டும் தடைப்படக்கூடாது.

பாகவதர் : இந்த நேரத்திலே நாங்க கொஞ்சம் டீ குடிச்சிட்டு வந்திடுறோம்.

பாஸ்கரன் : சீக்கிரமா போயிட்டு வந்திடுங்க. இந்த விவகாரம் முடிஞ்சதும் கூப்பிடுறேன்.

(கம்பரும் பாகவதரும் மிருதங்கக்காரரும் விரிசலடைந்த மதிற்சுவர் வழியாக வெளியேறுகிறார்கள். 'சூரிய சந்திரர்கூட' என்ற வாசகத்தைச் சொல்லிக் கொண்டு சங்குநாயர் பின்புறமாக நடந்தபடி அரங்கத்திற்குள் நுழைகிறான். வயது ஐம்பத்தாறு இருக்கும். முரட்டு மீசை, கிழியத் தொடங்கியிருந்த ஒரு அரைக்கை பனியன், துண்டினால் தலைப்பாகைக் கட்டு. கைலியை எடுத்து மடித்துக் கட்டியிருக்கிறான். ஒரு கையில் தடிக்கம்பு. இன்னொரு கையில் அங்குசமும் வடக்கயிற்றின் ஒரு முனையும். அதன் மற்றொரு முனை தொலைவில் எங்கேயோ கட்டப்பட்டிருக்கிறது. கயிற்றின் சுருளை நிமிர்த்திவிட்டுக் கொண்டு நடந்து வருகிறான். இடுப்பில் ஒரு பெரிய வெட்டரிவாள்.)

பாஸ்கரன் : (சங்கு நாயரின் அருகில் சென்று) யாரு அத்துமீறி உள்ளே நுழையறது? (குரல் கேட்டதும் சங்கு நாயரின் தனிமை கலைகிறது. நிமிர்ந்து பார்த்து அங்குசத்தைத்

தரையில் ஊன்றுகிறான்.)

சங்குநாயர் : டேய் பாசுக்கரா!

(இருவரும் ஒருவரையொருவர் பார்த்தபடி நிற்கிறார்கள்.)

ஏண்டா, என்னையாடா யாருன்னு கேக்கறே?

(பாஸ்கரன் பதில் பேசவில்லை)

(நெளிந்து நின்றபடி) இங்கே இப்படி நிக்கிற நான் யாருன்னு?

பாஸ்கரன் : குஞ்சியம்மாவோட அரைகுறை கைத்தடி ப்ளஸ் அங்குசம் ப்ளஸ்...

சங்குநாயர் : போடா ப்ளஸ்ஸு, நான் சாட்சாத் கோச்சாம்பள்ளி கேசவனோட மாவுத்தன். கேசவனோட?

பாஸ்கரன் : காதலியைக் கட்டிக்கிட்டவன்.

சங்குநாயர் : காதலி! ஆமாம், காதலிதான். காதலின்னு சொன்னா (குரலைத் தாழ்த்தி) ரகசியத் தொடுப்புக்காரி. கல்யாணம் கட்டாத மனைவி. காதலிகிட்ட காம பாலன் பாடின பாட்டைக் கேட்டிருக்கிறயாடா? தங்கக்குடமே? இல்லே! கேட்டுக்கோ. (பாடுகிறான்)

**"காதலியே, உனைத் தேடியலைந்தேன் நான்**
**காமமோகினி நீ என்றன்**
**காமத் தீயை அணைத்தாலும்..."**

(நினைவுக்குக் கொண்டுவர முயலுகிறான்.) அணைத்தாலும்... அணைத்தாலும்... அதுக்குப் பெறகு என்னப்பா, பாசுக்கரா? சரியான கெட்டவார்த்தை என்ன இருக்குடா, நீசப்பயலே, ஏண்டா, ஒனக்குப் பாட்டுப் பாடத் தெரியுமாடா?

பாஸ்கரன் : சுமாராத் தெரியும்!

சங்குநாயர் : அப்படீன்னா, பாடு, கேக்கலாம். (கதாகாலட்சேப பாட்டு)

பாஸ்கரன் : (பாடுகிறான்)

**"தேவாதி தேவரெல்லாம்**
**கேசவன்தன் முதுகிலேற்றினாங்க**
**தடிகளாம் மரத்தடிகளெல்லாம்**

**கேசவன் மேல் ஏற்றினாங்க**
**குச்சிக்குச்சி விறகுகூட**
**கேசவன் மேல் ஏற்றினாங்க**
**காலிப்பசங்க கூடக்**
**காதைப்பிடிச்சிப் பார்த்தாங்க."**

*சங்குநாயர் :* நிறுத்துடா புளுகுனிப்பயலே! நாலு கெட்டவார்த்தை பாட்டுத்தெரியாத நீயா கதாகாலட்சேபம் பண்ணப் போறே? பெண்மணித்திருமேனி பூரத் திருவிழாவுக்குப் பாடின பாட்டு கேட்டிருக்கியா?

*பாஸ்கரன் :* யாரு? யாரு?

*சங்குநாயர் :* பெண்மணித் திருமேனி. ஏண்டா, பெண்மணித் திருமேனியோட பாட்டைப் படிக்காம பின்னெ என்னடா படிக்க இருக்குது? பிஏ. படிச்சிருக்கானாம்! இந்தா, கேளுடா.

**"பத்தியுடன் விடிகாலை தேய்த்துக்குளித்து முடித்து**
**பகவானின் எதிர்சென்று பாதாரவிந்தங்களை**
**சிந்தை ஒருசேர ஒரு கணம்**
**விழிமூடி அங்கிருக்கும் நிலையில்**
**அப்போதெனக்குத் தோன்றியதே**
**மாரனின் அடையாளமும் முறுவலிக்கும் இளமையும்**
**பந்துநிகர் முலையும் குளிர்ந்த...**
**குளிர்ந்த...**
**அதுக்குப் பிறகு என்னடா?**

*பாஸ்கரன் :* குளிர்ந்த... குளிர்ந்த... ஐஸ்க்ரீம்!

*சங்குநாயர் :* போடா, திருமேனி பிரமாதமா கல்லு வச்ச ஒண்ண சொல்லியிருக்காரு அந்த இடத்திலே.

*பாஸ்கரன் :* குசேலர் வரலாறு.

*சங்குநாயர் :* நரகாசுர வதம்! சரி, குசேலர் வரலாறுன்னா குசேலர் கதையாகவே இருக்கட்டும். குசேலருக்கு எத்தனை குழந்தைங்க இருந்தாங்க? சொல்லு பார்ப்போம்.

*பாஸ்கரன் :* குசேலருக்கு...

*சங்குநாயர் :* எத்தனை குழந்தைங்க இருந்தாங்கன்னு சொல்லு.

*பாஸ்கரன் :* குசேலருக்குக் குழந்தைங்களா! கோழிக்கு முலை முளைப்பது! (உரக்கச் சிரிக்கிறான்)

சங்குநாயர் : பட்டினியா கிடந்ததுனாலே குழந்தைங்க இல்லாம இருந்தது என்பதுதானே உன் நினைப்பு? குழந்தைங்க இருந்தாங்கடா. குசேலரோட பொட்டக் குழந் தைங்களை இல்லே நான் கேட்டது. 'கிழக்குத் திக்கு வெளுக்கையில் ஆத்ம பிறவிகள்'.. ஆன்ம பிறவிகள்... ஆன்ம பிறவிகள்... அதுக்குப் பிறகு என்னடா?

பாஸ்கரன் : ஆன்ம பிறவிகள்!

சங்குநாயர் : தீவட்டி! சரி, ஆன்ம பிறவிகள் என்று சொன்னால் என்னடா அர்த்தம்?

பாஸ்கரன் : பிள்ளைகள்தான்.

சங்குநாயர் : ஆம்பிளெப் பசங்க! சரி, குசேலரோட பெண்டாட்டி சொன்னா, "பிள்ளைங்கெல்லாம் பசியினாலே அழுவு துங்க. நீங்க போயி கிருஷ்ணபிரான்கிட்ட கொஞ்சம் கடன் கேட்டுப்பாருங்க. நீங்க போகலேன்னா நானே நேரிலே அங்கே போவேன்' அப்படீன்னு. பொண்டாட்டி சொன்னதும் குசேலர் அங்கே வேகமாப் போனாரு.

பாஸ்கரன் : சங்குமாமா!

சங்குநாயர் : ... ம் ....?

பாஸ்கரன் : அப்படிச் சொல்லவில்லையே.

சங்குநாயர் : சொன்னாங்கிறேன்.

பாஸ்கரன் : நான் சொல்றேன் சொல்லலேன்னு.

சங்குநாயர் : நான் சொல்றேன் சொன்னான்னு.

பாஸ்கரன் : சொல்லலே.

சங்குநாயர் : என் பொஞ்சாதிகிட்டே நேத்துக்கூட அந்தப் பாட்டைப்பாடிக் காமிச்சேண்டா, மரமண்டையா.

பாஸ்கரன் : குஞ்சியம்மா கிட்டவா?

சங்குநாயர் : ஆங்.. கமனிமணி காதலிகிட்டெ.

பாஸ்கரன் : அதாவது, குசேலரோட மனைவி சொன்னதுதானே. குசேலருக்குக் குழந்தைங்க இருந்தது உண்மைதான்.

சங்குநாயர் : ஒத்துக் கொள்கிறாயா?

பாஸ்கரன் : ஒத்துக் கொள்கிறேன்.

சங்குநாயர் : அப்படீன்னா, உனக்கும் குஞ்சியம்மான்னா பயம் தானாக்கும்!

பாஸ்கரன் : பயமில்லே, பாசம்! குஞ்சியம்மாகிட்டெ பாசம், கேசவன்கிட்டெ பாசம், உதுப்பானோட நொண்டி மாட்டுக்கிட்டெ பாசம்.

சங்குநாயர் : பாசம்!

பாஸ்கரன் : சங்குமாமாவுக்கு பயம். குஞ்சியம்மாவைக் கண்டா பயம், கேசவனைக் கண்டா பயம், கள்ளுக்கடை மத்தாயியைக் கண்டா பயம்.

சங்குநாயர் : அவங்களுக்குத்தான் என்னைக் கண்டா பயம். யாருக்கும் அனுசரணை கிடையாது. எல்லோரோட குடலையும் உருவிப்போட்டுடுவேன் நான்.

பாஸ்கரன் : சங்குமாமா! அவங்களெல்லாம் சட்டதிட்டங்களை அனுசரிக்காம மீறுறவங்களா இருக்காங்க. குஞ்சியம்மா பெத்துப் போடறதில்லே, கேசவன் தடிமரத்தைத் தூக்கிறதில்லே, மத்தாயி கடனுக்குக் கள்ளு தர்றதில்லே... இது எல்லாமே சட்டத்தை மீறுவதாக்கும்.

சங்குநாயர் : தடிமரத்தைத் தூக்க மறுக்கிறது அகம்பாவம். இன்னிக்கு அவனுக்கு நான் சரியான பாடம் சொல்லித் தரப்போறேன். படகுத்துறைக்கு நடக்கிற துக்கு முரண்டு பண்ணினா இங்கிருந்தே தடிமரத்தை இழுக்கட்டும். அதுக்குத்தான் இந்த வழி செஞ் சிருக்கேன். (வடக் கயிற்றைக் காண்பிக்கிறான். கயிற்றின் சுருளை நிமிர்த்திக்கொண்டே முன்பக்கமாக நடக்கிறான். மேடையின் நடுப்பகுதிக்குச் சென்றதும் கயிற்றின் கடைசிப்பகுதி வந்துவிடுகிறது) பத்தலை யேடா மடையா! கயித்துக்கு நீளம் பத்தலேடா. (இழுத்துப் பார்க்கிறான். கொஞ்சம்கூட நீளவில்லை.)

பாஸ்கரன் : இன்னொரு முனை எங்கே?

சங்குநாயர் : இன்னொரு முனை ஆத்தங்கரையிலே இருக்கிற கல்லுக்காரனோட தேக்குத் தடியிலே.

பாஸ்கரன் : கேசவனோட தும்பிக்கையை எட்டிப்பிடிக்க இன்னும் பத்தடியாவது வேணுமில்லே?

சங்குநாயர் : அதுக்கு இனிமே என்னப்பா செய்றது?

பாஸ்கரன் : (சிரித்தபடி) நான் சொல்றேன். சங்குமாமா அஞ்சரை அடி. கைத்தடி மூணு அடி. தொறட்டி நாலடி. சரியாயிருக்குமில்ல?

சங்குநாயர் : சரியாயிருக்கும்.

பாஸ்கரன் : எல்லாத்தையும் சேர்த்து இழுத்துக் கட்டினா பதிமூணடி

சங்குநாயர் : போடா மடையா. (கயிற்றின் நுனியை நிமிர்த்திக் கொண்டு) பிடியேண்டா கிறுக்கா. விட்டிராதே.

பாஸ்கரன் : (பிடித்தபடி) சேர்த்துக் கட்டப்போறியா?

சங்குநாயர் : ஆமாண்டா, உன் கழுத்தையும் சேர்த்து. புத்தி வேணும்டா பி.ஏக்காரா. கேசவனை இந்தப் பக்கமா நூறடி தள்ளிக்கொண்டு வந்து கட்டினாப் போதாதா, மடையா?

பாஸ்கரன் : மரத்தடியை இழுக்குறது யாரு?

சங்குநாயர் : அவங்கப்பன்! இப்போ இந்த எமகாதகனைக் கிளப்புவோமா?

பாஸ்கரன் : தேவாதி தேவரெல்லாம்

**கேசவன் முதுகில் ஏறினாங்க**
**தடிகளாம் மரத்தடிகளாம்...**

சங்குநாயர் : ஆமாம், முதுகிலே ஏறினாங்க! சிலைகளான சிலைகளையெல்லாம் இந்தக் குசவன் தரையிலெறிந்து சிதறடிச்சான்னு பாடுடா. சாமி சிலைகளைத் தகர்த்தெறிவான்னு பேரு வாங்கின பெறகு இந்தக் கழிசடையை யாராச்சும் கூப்பிடுவாங்களா திருவிழாக் களுக்கு?

பாஸ்கரன் : கூப்பிடாதது அவங்களோட தப்பு.

சங்குநாயர் : எப்படிக் கூப்பிடுவாங்க அடங்காப்பிடாரியை! திருச்சூர் பூரத்துக்கு ஒரு காலத்திலே கேசவனைப் பார்க்கிறதுக்குன்னே ஆளுங்க வந்துக்கிட்டிருந்தாங்க, தெரியுமா? நீ பார்த்திருக்கியாடா திருச்சூர் பூரத் திருவிழா?

பாஸ்கரன் : இல்லே.

சங்குநாயர் : இந்த இந்தியா முழுக்கவுமிருந்து ஆனானப்பட்ட யானைகளெல்லாம் வரும் பூரத்திருவிழாவுக்கு. எங்கே ருந்தெல்லாம் வரும் தெரியுமா! காசி, ராமேஸ்வரம், ஜப்பான், ஹரித்துவாரம், அமெரிக்கா, ரிஷிகேசம், வடபழனி, பர்மா, இப்படி நிறைய இடங்கள். அவை யெல்லாம் கேசவனைப் பார்த்ததும், ராஜாவுக்கு முன்னாலே நாம் பயபக்தியோட கைகட்டி வாய்பொத்தி நிற்கிற மாதிரி, தலையைத் தாழ்த்தி பவ்யமா நிக்கும். கேசவன் தலையை நிமிர்த்தி கம்பீரமாக நடப்பான். முகபடாம் பூட்டின ஒரு நூறு யானைங்க ரெண்டு பக்கமும். (ரோஷம் பொங்க) போச்சு. எல்லாம் முடிஞ்சு போச்சு! எமகாதகத் திருடன்! (கயிற்றை மீண்டும் மீண்டும் இழுத்துப் பார்க்கிறான்)

பாஸ்கரன் : (நீட்டிப் பாடுகிறான்)

**நாட்டாமைக்காரர்களுக்கு நஷ்டம் பலபல**
**வருமானங்கள், கடவுளுக்கும் நஷ்டம்**
**மாவுத்தனுக்கு ஒட்டுமொத்த நஷ்டம், சிவசிவ இதில்**
**இந்தக் கேசவனுக்கு என்ன லாபம்?**

சங்குநாயர் : (கயிற்றைக் கீழே போட்டுவிட்டு) அவனுக்குத்தாண்டா முழுக்க லாபம். உடம்பை அலட்டி வேலை செய்ய வேணாம். எனக்குச் சம்பளம் மட்டுமில்லே நஷ்டம், அவனாலே எனக்கு எவ்வளவு பெரிய பதவி கிடைத் திருந்தது! நான் அங்கேயும் இங்கேயும் நடமாடுறப்போ பொண்ணுங்க அவங்களுக்குள்ளே பேசிக்குவாங்க. (வெட்கப்படுவதுபோல் நடித்து) 'அதோ போறாரு பாரு கொச்சாம்பள்ளி கேசவனோட மாவுத்தர்' அப்ப டீன்னு. நான் திரும்பிக் கடைக்கண்ணாலே பார்த்தால் அந்த அழகுப் பெண்களிடத்திலே ஒரு வெட்கம் தெரியும். கவிஞர் வெண்மணித் திருமேனி சொன்னது போல 'சிருங்காரப்பால் குழம்பில்... குழம்பில்...' மறந்துபோய் தொலைஞ்சிருச்சு, மூதேவி!

பாஸ்கரன் : இது குஞ்சியம்மாவுக்குத் தெரியாம இருந்தது நல்ல வேளை!

சங்குநாயர் : (ரகசியமாக) குஞ்சியம்மைக்குத் தெரியாம என்னடா. அதனாலே திருவிழாவுக்குப் போயிட்டு வந்தப்போ

வெல்லாம் வீட்டிலே ரகளைதான். (மெதுவாகச் சொல்வதுபோல்) திருவிழா நடக்கிற இடத்திலே எல்லாம் ஒவ்வொண்ணு.

பாஸ்கரன் : ஒவ்வொண்ணுண்ணா?

சங்குநாயர் : உன் தலை! (ரகசியமாக) ஒவ்வொரு பொம்பிளை. ஒவ்வொரு தடவை போறப்பவும் ஒரு பொம்பிளை.

பாஸ்கரன் : (உரக்கச் சிரித்து) இப்போ அவங்கள்ளாம் விரக தாபத்திலே துடிச்சிக்கிட்டிருப்பாங்களே!

சங்குநாயர் : (கோபத்துடன்) எல்லாத்தையும் போக்கிட்டானே எமப்பயல்! முதல்லே வெட்டிக்காட்டுச் சாமியோட விக்கிரகத்தைக் கவிழ்த்தினதா நாலுபேரு சொன்னப்போ அது பொய்யாயிருக்கும்னு நான் நெனச்சேன். அதுக்குப் பெறகு வலுக்கட்டாயமா எப்போ தலை மேலே ஏறினாலும் ஏத்தி வச்சாலும் அப்போ வெல்லாம் ஒரேயடியா தலையாட்டம்தான். விக்கிரகம் ஒரு பக்கமா விழும். புரோகிதரு இன்னொரு பக்கமா விழுவாரு. விக்கிரகத்தை உடைக்கிறவன்னு அவனுக்குப் பேரு உண்டாயிருச்சு. கோயில்லேருந்து விலக்கிட்டாங்க எமப்பயலை. வேறே எந்தக் கோயில்லேயும் சேர்த்துக்கிடலே.

பாஸ்கரன் : விக்கிரகத்தைச் சுமந்து அலுத்துப்போச்சு போலிருக்கு. எப்படியோ கேசவனுக்கு மோட்சம் கிடைக்கிறதுக் கான சான்ஸ் நஷ்டம். தேவஸ்தானத்து ஊர்வலக் கூலி நஷ்டம். சங்குமாமாவோட காதலிகளுக்கு நஷ்டம்.

சங்குநாயர் : அது மட்டுமல்லடா நஷ்டம். நல்ல காலத்திலேயே அவனுங்க ஒழுங்கா சம்பளம் தரமாட்டானுங்க. ஊர்வலத்துக்குப் போனா கேசவனுக்கு ஒரு நாளைக்கு இருநூறு ரூபா கூலி. எனக்குச் சம்பளம் ரெண்டு ரூபா.

பாஸ்கரன் : கேசவனுக்கு சம்பளம்?

சங்குநாயர் : ஆமா, கொசவனுக்குக் கிம்பளம்! பெரிய தென்ன மட்டையோ தாழை மடலோ கெசடச்சா அதுவே அதிகம். ஏம்ப்பா, ரெண்டு ரூபா கெடச்சா அதை வச்சிக்கிட்டு நான் என்னதான் செய்ய முடியும்? வயிறு நிறைய தண்ணிகூடக் குடிக்க முடியாது.

பாஸ்கரன் : என்னிக்கும் கேசவன் விக்கிரகத்தைக் கீழே போட்டதில்லையே? நாட்டாமைக்கு எந்தத் தொந்திரவும் கொடுத்ததில்லையே? ரொம்ப மரியாதை தெரிஞ்சவனாச்சே.

சங்குநாயர் : மரியாதை தெரிஞ்சவன்! கொல்லணும் மூதேவியை! என் வயித்திலடிச்சிட்டானே! ஊர்வலத்துக்குப் போகாததினாலே சம்பளத்தை நிறுத்திட்டாங்க. விக்கிரகத்தை உடைக்கிறவனை யாராச்சும் கோயில்லே சேர்த்துக்குவாங்களா? நாட்டாமை சொல்லிட்டாரு. இனிமே தடிமரத்தைச் சுமந்தும் இழுத்தும் பிழைக்க வேண்டியதுதான்னு. அதையும் செய்து பார்த்தாச்சு. மானம் ரோஷம் பார்க்கலே. தடிமரத்தைத் தூக்கிப்பிடிச்சிட்டா லேசிலே விடுறதில்லே. எப்போ தடிமரத்தைப் பிடிச்சாலும் அப்போவெல்லாம் அதே ஆங்காரம். கடைசியிலே சங்கிலி போட்டுக்கட்டி ஒரே இடத்திலே நிறுத்தி வச்சாச்சு. அன்னிலேருந்து நின்ன நிலையிலேயே ஒரே இடம்தான்.

பாஸ்கரன் : எத்தனை வருஷமா இப்படி நிற்கிறது! அகிம்சைப் போராட்டம், ஒத்துழையாமை இயக்கம், சத்தியாக்கிரகம் இதுதான்னு சொல்லலாம். ஆனால் இதெல்லாம் யாருக்குத் தெரியும்?

சங்குநாயர் : செமத்தியா சாத்தணும் முரடனை. ஒழுங்கா தடிமரத்தைத் தூக்க வைக்கிறேனா இல்லையா பாரு. சாகிற வரைக்கும் தடிமரத்தைச் சுமக்க வைக்கிறேன்.

பாஸ்கரன் : கேசவன் எப்படிச் சாகமுடியும்! தடிமரத்தைத் தூக்குறது உடம்புக்கு நல்ல எக்சர்சைஸ். ரொம்ப ஓய்வு வேறெ. பென்ஷன் வாங்கிக்கிட்டு சுகமா இருக்கிற கவர்ன்மென்ட் ஆபிசரில்ல?

சங்குநாயர் : நீதாண்டா சரியான மரமண்டை. மரத்தைத் தூக்குறதுக்கும் சாமி ஊர்வலத்துக்குப் போறதுக்கும் இல்லாம வேறெ எதுக்குடா யானை பொறந்திருக்கு? (பாஸ்கரனுக்குப் பக்கத்தில் சென்று) மனுசன் பொறந்தது எதுக்காக?

பாஸ்கரன் : சாகிறதுக்கு.

சங்குநாயர் : போடா மடையா. மனுசன் பொறந்தது கள்ளு குடிக்கவும் கல்யாணம் கட்டிக்கவும்தான். "மகளிரவர் முகத்தாமரை, மகளிரவர் பாதத்தாமரை." (மறுபக்கம் நோக்கி நடக்கிறான். சிறிதே நடந்துவிட்டு சட்டென்று திரும்பி வருகிறான்). டேய், கேள்விப் பட்டியாடா பாசுக்கரா, நீ வாசிச்சியாடா, பத்திரிகைகளிலே யெல்லாம் வெண்டைக்காய்த்தனமா வழ வழான்னு என்னென்னமோ எழுதியிருக்கானாமே, கேசவனுக்கு உடம்பு சரியில்லே—ஆபத்து அப்படீன்னு. காலன் காத்திருக்கான். வாசல்லே வந்து நிக்கிறான் அப்படி இப்படீன்னு டீக்கடையிலே ஆளுக்கொரு பத்திரிகை படிக்கிறானுங்களே, இதையெல்லாம் பத்திரிகையிலே எழுதினவன் எவன்டா?

பாஸ்கரன் : பத்திரிகைக்காரங்களுக்கு எழுதுறதுக்கு ஏதாச்சும் பெரிய சங்கதி வேணாமா சங்குமாமா? சர்க்காரைப் பத்தி எழுதினா ஜெயில்லே போட்டிருவாங்க. பெரிய ஆளுங்களைப் பத்தி எழுதினா கோர்ட்டுக்குப் போகணும். கேசவனுக்கு சீக்கு வந்தா அது செய்தி. இல்லியா பின்னே! செத்தா அதைவிடப் பெரிய செய்தி! நம்ம பத்திரிகை நிருபர் சு.ம. எழுதி அனுப்பிச்சதா இருக்கும்.

சங்குநாயர் : எனக்கு இடுப்பு வலியெடுத்து எத்தனை வருசமாச்சு! அதை அந்த சு.ம.கிட்ட சொல்லவும் செஞ்சோம். ஆனா இதுவரைக்கும் அவரு இதைப்பத்தி ஏதாச்சும் எழுதினாரா?

பாஸ்கரன் : அது குஞ்சியம்மா பத்திரிகை நடத்தினாத்தான் நடக்கும். அப்போ சங்குமாமாவோட சீக்கு, டூர் புரோக்ராம், கள்ளுக்கடைப் பிரசங்கம் ஆக எல்லாமே செய்தியா வெளிவருமில்லே?

(சங்குநாயர் கோபத்துடன் நடக்கிறான். தொலைவில் கம்பருடைய குரல்:) "மிதியடி, காமசூத்ரம், பகவத்கீதை, தேர்தல் அறிக்கை, தோல் செருப்பு, பஞ்சாங்கம், கண் மை..."

சங்குநாயர் : வாடா, இங்கே வாடா, கம்பருக் கசுமாலம்!

கம்பர் : (குரல்) "முந்திரிப் பருப்பு வித்து தீர்ந்தாச்சு. ரொக்கமாப்

பணத்தைத் தந்தாலும் முந்திரிப்பருப்போ வேர்க் கடலையோ இன்னிக்குக் கிடைக்காது."

(கம்பர் நுழைகிறார்)

(பாஸ்கரனிடம்) அவரு வர்றாரு. (சங்குநாயரிடம்) கம்ப ராமாயணமோ பகவத்கீதையோ தேவைப்பட்டால் தர்றேன்.

சங்குநாயர் : கம்பராமாயணம்! கடலைப்பொரி இருந்தா நாலணா வுக்குத் தாடா.

கம்பர் : கடலைப்பொரி அவுட் ஆஃப் ஸ்டாக். எனக்குத் தரவேண்டிய பன்னிரண்டு ரூபா பாக்கி எப்போ கிடைக்கும்?

சங்குநாயர் : உன்னோட பன்னிரண்டு சல்லிக்காசு! அந்தப பன்னிரண்டு சல்லிக்காசை ஒரே தவணையிலே தீர்த்து முடிச்சவண்டா இந்த சங்குநாயரு. புரிஞ்சதா?

பாஸ்கரன் : அதெல்லாம் முன்னாலே திருச்சூர் பூரத் திருவிழா விலே கேசவனோட ஊர்வலத்தின்போது கண்மணி களும் பெண்மணித் திருமேனியும் இருந்த காலத்திலே. சங்குமாமா இப்போ தடி தூக்கப் போங்க. நாங்க கொஞ்சம் ஒத்திகையைப் பார்க்கிறோம்.

சங்குநாயர் : தொடங்கிக்கோ உன் காட்டுக்கத்தலை. உன்னோட பாட்டையும் பிரசங்கத்தையும் கேட்டுக்கேட்டு காது கெட்டுப்போச்சு. கதாகாலட்சேபமாம்! (போவதாக நகர்கிறான்.)

கம்பர் : (சங்குநாயருக்கு அருகில் சென்று) ஏய், அந்தக் காசை மட்டும் தராம இரு. பார்க்கலாம். சங்குமாமா என்கிற தாலதான் என் குணத்தைக் காட்டாமல் இருக்கேன். மரியாதையா நம்ம கணக்கைத் தீர்க்கணும்.

சங்குநாயர் : நீயும் உன் கணக்கும்! ஏய், கம்பரே, இந்தத் தடியைத் தூக்கி ஏதாச்சும் கிடைச்சா உன்னோட காசைத் தூசு மாதிரி வீசி எறிஞ்சிருவேன். அவன் ஒழுங்கா தடி தூக்கறானான்னு பார்க்கிறேன். (சுவரின் விரிசல் பகுதி வழியே கடந்து இடது பக்கம் போகிறான்.)

கம்பர் : இனி அவங்களைப் போய்க் கூப்பிட்டு வரட்டுமா?

பாஸ்கரன் : அவங்களைக் கூப்பிடுறது சங்குமாமாவோட இந்த

நாடகம் முடிஞ்ச பெறகு ஆகட்டும். கேசவனை வச்சு துடி தூக்கப் போறதாக நெனப்பு. ஒரு ரகளை முடிந்து கள்ளுக்கடைப் பக்கமாப் போய்ச் சேரட்டும். அது வரைக்கும் நாம ரெண்டு பேருமாச் சேர்ந்து பாட வேண்டிய அந்தப் பாட்டை ஒரு தடவை பாடிப் பார்ப்போம்.

கம்பர் : "கேசவன் தன் முதுகிலிருந்து...?"

பாஸ்கரன் : ஆமாம்... அதுக்கு முன்னாலே நம்மோட வசனம் இருக்குதில்ல... இதோ, ஞாபகம் வந்திருச்சு. ரெடி. (கதாகாலட்சேபத்திற்குத் தயாராவது போல்) சுவாமி வாகனம் மட்டுமில்லாத விக்கிரக ஊர்வலத்துக்கு வர்றதும் கேசவனோட முக்கிய வேலை. கடினமான வேலைகளைச் செய்ய வைப்பதற்கும் பாரம் சுமக்க வைப்பதற்கும் அடிமை வர்க்கங்களை உருவாக்குகிற எஜமான வர்க்கம் அவங்க முதுகிலே ஏறி சவாரி செய்யுது. இதுதான் நம்மோட மகத்தான ஏற்பாட்டோட சிறப்பு. கேசவனைத் தயார் பண்ணி நிறுத்துவாங்க. சாமி விக்கிரகம் மட்டுமில்லே. பூசாரிப் பட்டாளம் முழுக்க அவனோட முதுகிலே ஏறும் முத்துக்குடை, வெண்சாமரம், ஆலவட்டம்...

கம்பர் : வாத்தியாரே, இங்கே ஒரு கதை சொல்லணும். உபகதைகள் அப்படி இடையிடையே வந்துகிட்டே இருக்கணும். புட்டுல தேங்காய்த் துருவல் கலந்தாற் போல, இந்த இடத்திலே செருகுறதுக்கான ஒரு கதை என் கையிலே இருக்கு, வாத்யாரே.

பாஸ்கரன் : என்ன அது?

கம்பர் : சாகக்கிடந்த பாட்டியோட கதை.

பாஸ்கரன் : கம்பரே, நம்ம பாட்டிலேயே இருக்கு அந்தக் கருத்து. பாடுறேன் பாரும். (பாடுகிறான்)

**"திருவிழாவிற்கு, ஊர்வலத்திற்கு,**
**ஸ்ரீபலிக்கு உற்சவமூர்த்திக்கு**
**கோடிப்பிரகாச தீபத்தொகுப்பாய்**
**சேவகனாய் நிலைபெறவே**
**கேசவன்தன் முதுகிருந்து வலிந்து வீசிடும் ஆயிரம்**
**சாமரங்களும் ஆலவட்டமும் ஏதினி வேண்டும்**

**அவனுக்கு!**

**கண்மறைப்புக்கும் தும்பிக்கை மறைப்புக்கும்**
**சங்கப்பட்டை,**
**நெற்றிப்பட்டை, என்னதான் குறைவு கேசவனுக்கு!**
**இவையனைத்தும் இருந்தபோதிலும் அவற்றுடன்**
**கால்சங்கிலி, நடுவிலங்கு, முதுகுச் சங்கிலி,**
**முரட்டுத் தோல்வார், கூர்மைமிகு தோட்டிகள்,**
**கைத்தடி, குத்தீட்டி, இரும்புக் கம்பிகள், கத்திகள்,**
**எத்தனை ஆபரணங்கள் கேசவன் அணிவதற்கு,**
**உண்பதற்கோ எத்தனை பண்டங்கள் முப்பது...''**

*('எத்தனை பண்டங்கள் முப்பது' என்று சொல்லப் படும்போது யானையின் சங்கிலி எழுப்பும் ஒலி.)*

*சங்குநாயர் உரக்கக் கூவுகிறான்: ''தள்ளி நில்லு பாசுக்கரா, தள்ளி நில்லு! கோபத்திலே வர்றான் இந்தக் கழிசடை.''*

*(சங்குநாயர் முன்னாகவும் கேசவன் பின்னாகவும் மதில் இடிந்த இடத்தில் காட்சியளிக்கிறார்கள். சங்கிலி யால் பிணைக்கப்பட்ட யானையின் முன்பகுதி மட்டும் தென்படுகிறது. எலும்புகள் வெளித்தெரியும் மெலிந்த உடல் முழுக்க சங்கிலிகள். பரிதாபம் நிழலாடும் அகன்ற கண்கள். கேசவன் மதிலின் இடிந்த பாகத்தில் ஒதுங்கி நிற்கிறது. சங்குநாயர் சுவரின் ஒரு புறத்திலிருந்து மறுபுறத்திற்குக் கடந்து செல்லக் கொஞ்சம்கூட தைரியமில்லாமல், ஆனாலும் அதி காரத்தை வெளிப்படுத்திக்கொண்டு, ''ஸ்டெடி, ஸ்டெடி. எழுந்து நில்லானெ. இல்லாட்டி கொன் னுடுவேன்'' என்று ஏதேதோ கூறுகிறான்.)*

*பாஸ்கரன் :* *எவ்வளவு ஆபரணங்கள் இவன் அணிவதற்கு, உண்பதற்கு எத்தனை பண்டங்கள்..*

*சங்குநாயர் :* *நிறுத்து உன் கதாகாலட்சேபத்தை! அவன் மிரண்டால் அவனைப் பிடிச்சுக் கட்ட முடியாது. அந்த வடக் கயிற்றை அவன்கிட்ட எடுத்துக்கொடு. (யானையிடம்) அங்கே போய் நில்லு. ஸ்டெடி இந்தப் பக்கம் வராதே. கொன்னுடுவேன்.*

*பாஸ்கரன் :* *(பாட்டைத் தொடர்ந்தபடி) எத்தனை பண்டங்கள் முப்பது கடலை..*

சங்குநாயர் : கொஞ்சம் நிறுத்து. அந்த வடத்தைக் கொடு.

பாஸ்கரன் : நேத்து மதியச் சாப்பாடு வெட்டிட்டான். பத்து பைசாவுக்குக் கடலை வாங்கினதுலே முப்பது கடலையை அவனே சாப்பிட்டு முடிச்சான். பத்து என்னோட லஞ்ச். (யானையிடம்) இந்தா, ஒரு அஞ்சு கடலை, இதையும் சாப்பிடு. (நான்கைந்து கடலையை எடுத்து யானைக்குக் கொடுக்கிறான். வடக்கயிற்றைத் தும்பிக்கையால் பிடிக்க வைக்கிறான்.)

சங்குநாயர் : இழுடா..ம்..இழு. உன்னை.. (குச்சியை ஓங்குகிறான்.) (கேசவன் அசையாமல் நிற்கிறது)

கம்பர் : இன்னிக்கு லஞ்ச் நல்லா செரிக்கணுமில்லையா. நாட்டுப்பழம் ரெண்டு, வேர்க்கடலை, பத்து...ம்... பிடிடா பிடி.

சங்குநாயர் : இழுடா. மர்மத்தைப் பார்த்துக் குத்திடுவேன் குத்தி! (தோட்டியினால் அடிப்பதுபோல் பாவனை செய்து விலகி விலகிப் போகிறான்.)

பாஸ்கரன் : இழுடா கேசவா. கல்லுக்காரனின் கள்ளைக் குடிச்ச மாதிரி வெட்டி இழு. இந்தா, இழு.

(கேசவன் யானை முனைந்து இழுக்கிறது. தான் கூறியதை அது அனுசரிக்கிறது என்பதாக மகிழ்ந்து சங்குநாயர் 'இழு, ந்தா... இழு' என்று சொல்லிக் கொண்டே தோட்டியையும் ஈட்டியையும் காண்பிக் கிறான். எல்லாருமாகச் சேர்ந்து 'இழு இழு' என்று சொல்லிக்குரலை உயர்த்துகிறார்கள். கேசவன் வடக் கயிற்றை நன்றாக இழுத்துவிட்டுப் பின்னர் விட்டு விடுகிறது. வடக்கயிறு தெறித்து தடிகள் கிடக்கும் பகுதியில் போய் விழுகிறது. இழுத்துப் பிடித்திருந்த வர்கள் தலைகுப்புறத் தரையில் விழுகிறார்கள். சற்றுத் தொலைவில் தடி உருண்டு விழும் ஓசை. சங்குநாயர் அதிர்ந்துபோய் கயிறு போன இடத்தை நோக்கிப் பார்த்தவாறிருக்கிறான்.)

சங்குநாயர் : சதிபண்ணிட்டேல்லடா, கரையிலே ஏத்திவச்சிருந்த தடிகளையெல்லாம் ஆத்திலே தள்ளிட்டேயில்ல.

பாஸ்கரன் : இது தெரியறதுக்குள்ளே கல்லுக்காரனின் தடி யெல்லாம் ஆத்திலே உருண்டு போயிருக்கும்.

சங்குநாயர் : (யானையைப் பார்த்தபடி) இன்னிக்கோட உன் கதையை நான் முடிக்கிறேன். காட்டேரிப்பய மவனே! கொன்னு தொலைச்சிடுறேன் உன்னை! (வெட்டரி வாளைக் கையில் எடுக்கிறான்.)

(யானை தலையை ஆட்டியபடி தும்பிக்கையை நீட்டுகிறது. 'ஐயோ! கொன்னுட்டான்! பிடிடா பாசுக்கரா' என்று கூக்குரலிட்டபடி சங்குநாயர் ஓடுகிறான்.)

பாஸ்கரன் : அதிகாரத்தைக் கையாள வேண்டிய ஆளே இப்படி ஒடி ஒளிஞ்சா எப்படி? (கேசவனுக்குப் பக்கத்தில் சென்று தந்தத்தைத் தடவிக் கொடுத்தபடி) ஆங்காரம் கூடியிருக்கிறது.

(யானை ஒப்புக்கொள்வதுபோல் தலையாட்டுகிறது.)

கம்பர் : அதெப்படி வாத்யாரே, பட்டினி கெடக்கிறப்போ அகங்காரம் அதிகமாகும்? நான் போய் மத்தவங் களைக் கூட்டிக்கிட்டு வர்றேன்.

(கம்பர் விளம்பரப் பலகையைக் கழுத்தில் தொங்க விட்டுக்கொண்டு நடக்கத் தொடங்கும்போது மெகபோனைத் தோளில் சுமந்தபடி ஒருவர் உள்ளே நுழைகிறார். அரசியல் தலைவரைப்போல் தோன்று கிறார். கம்பரும் தலைவரும் ஒருவரையொருவர் கோபத்துடன் பார்த்துக் கொள்கின்றனர்.)

தலைவர் : வணக்கம்!

பாஸ்கரன் : வணக்கம் வணக்கம். பார்த்து ரொம்ப நாளாயிடுச்சு. பங்களா கட்டிக்கிட்டிருக்கிற நெருக்கடின்னு கேள்விப் பட்டேன்.

கம்பர் : (திரும்பி நின்றபடி) பங்களா கட்டுறாராம்! ஏழை பாழைங்க வயித்திலடிச்சி பங்களா வேலை நடக்குது.

தலைவர் : (கம்பரை வேண்டாவெறுப்போடு பார்த்துவிட்டு, பாஸ்கரனிடம்) வேலை நெருக்கடி நேரம் கிடைக்கலே. தம்பிக்கு இன்னும் வேலை எதுவும் முடியலே போலிருக்கே. (கேசவனைப் பார்த்து) கேசவனோட விவகாரம் கஷ்டமாயிருச்சு போலிருக்கே! (பாஸ்கர னிடம்) தம்பி விஷயத்தை முடிச்சிடலாம். கொஞ்சம்

பொறுமையாக் காத்திருக்கணும்.

கம்பர் : காத்துக்கிட்டே இருக்க வேண்டியதுதான். இழுத்துப் போர்த்திக்கிட்டுத் தூங்க வேண்டியதுதான். பஞ்சாயத்திலிருந்து ஒரு கடைக்கு இடம் பதிந்து தர ஏற்பாடு பண்ணித்தர்றேன்னு சொல்லி என்கிட்டே யிருந்து காசு வாங்கி எத்தனை மாசமாச்சு!

தலைவர் : பதிந்து தரமாட்டேன்னு சொல்லலையே.

கம்பர் : கேட்காத விஷயம் கெட்டுப்போகும்கிற பயம்தான்.

தலைவர் : ஏய், கேவலமாப் பேசினா என்ன நடக்கும்னு தெரியுமில்லே?

கம்பர் : ஆமா, இப்போ ரொம்ப மானமரியாதையோட இருக்கிறாப்புல நெனைப்பு.

தலைவர் : நேரம் வரும். அப்போ உன்னை நான் பார்த்துக்கறேன்.

கம்பர் : நானும் பாக்காமலா போகப்போறேன்! எலும்பு தேய வேலை பார்த்துப்பிழைக்கிறவன் இந்த ராம கிருஷ்ணன். புரியுதா? அடுத்தவன் வயித்திலடிச்சி மாடமாளிகை கட்டுறவங்களைப் போல இல்லே.

தலைவர் : (பேச்சைத் திசை திருப்புவதுபோல) அப்படீன்னா கேசவன் இப்படி நின்ன இடத்திலேயே நிக்கிறா னாக்கும்? (பாஸ்கரனிடம்) தம்பியோட விஷயத்தை நான் எப்பவும் ஞாபகத்திலே வச்சிருக்கேன். (கேசவனுக்கு எதிரில் நின்று) கம்பீரமா லாயத்திலே இருந்த இந்த கஜவீரனை இப்படித் தொழுவத்திலே கட்டி வைக்கிற நிலைமை இன்னிக்கு வந்திருச்சே. (பாஸ்கரனிடம்) தம்பியைப் போலப் பல லட்சம் பேருடைய வேலையில்லாத் திண்டாட்டம் தீரணும்னா இந்த நிலைமையை மாத்தியாகணும்.

கம்பர் : சில மக்கள் துரோகிகளையும் மாற்றணும். வாத்தி யாரே, நான் போய்ட்டுவர்றேன். இங்கேயே நின்னுக் கிட்டிருந்தா பிண்டத்தைலம் நஷ்டமாயிரும். (இரண்டடி நடக்கிறான். மீண்டும் திரும்பி வந்து பாஸ்கரனிடம்) இந்தா பாரு, இன்னொரு விஷயம். இவர் அந்த யானைப் பக்கம் போகாம பார்த்துக்கோ. வெட்கம் கெட்ட பயல் (போகிறான்).

தலைவர் : (கம்பர் வெளியேறியதில் திருப்தியடைந்து, கம்பரைக் குறிப்பிட்டுச் சொல்வதுபோல் பாஸ்கரனிடம்) விவரம் புரியாது, படிப்பறிவும் கிடையாது. சரி, அப்போ நான் என்ன சொன்னேன்? (நினைவுக்கு வந்ததாக) ஆமாம், இந்த நிலைமையை மாத்தியாகணும்.

பாஸ்கரன் : மாத்துங்க, மாத்துங்க. எந்த நிலைமையை வேணும்னாலும் மாத்துங்க. கேசவனுக்கும் எனக்கும் ஒரு வேலை பார்த்துக் கொடுங்க. கேசவனுக்கு வேலை கிடைச்சா சங்குமாமாவுக்கு வேலை. சங்குமாமாவுக்கு வேலை கிடைச்சா குஞ்சியம்மாவுக்கு வேலை. அப்படியே வேறே நிறைய பேர்களுக்கும் வேலை கிடைக்கும். ஒருவகையான இன்டைரக்ட் எம்ப்ளாய் மென்ட். ஒரு விஷயம் கேசவன் விஷயத்தை முடிச்ச பிறகு என் விஷயத்தை கவனிச்சா போதும்.

தலைவர் : தம்பியைப் போலிருக்கிறவங்க களத்திலே இறங்கி வேலை செய்யணும். அது சரி, இப்போ என்ன செய்துக்கிட்டிருக்கே?

பாஸ்கரன் : பகற்தூக்கமும் கனவும்தான். பெரும்பாலும் களத்திலே தான் இறங்கி வேலை செய்துகிட்டிருக்கேன் என்று சொன்னால் வேற போக்கில்லே... கேசவனோட வாழ்க்கைச் சரித்திரத்தை ஒரு கதாகாலட்சேப முறையிலே நேயர்களுக்கு சமர்ப்பிக்கிறதுக்கான முயற்சியை இப்போ தொடங்கியிருக்கேன். எதுகை மோனைதான் சரியா அமைய மாட்டேங்குது.

தலைவர் : தம்பிக்கு விஷயத்தோட தீவிரம் இன்னும் புரியலே. கோயில்களிலே யானைகளைக் கட்டிவைக்கிற நிலவுடைமை முறையை முடிவுக்குக் கொண்டு வர இன்றைய அரசாங்கம் முன்வராதது ஏனென்றுதான் நான் கேட்கிறேன்.

பாஸ்கரன் : ஹியர், ஹியர்! ஆனால் எதுகை அழகு போதாது. முன்வராத மூர்க்க அரசாங்கத்தின் மூக்கை மூன்று முறை...

தலைவர் : சீ! தம்பிக்கு காரியத்துக்கு இடையிலே வேடிக்கை. கேசவனுடைய இரத்த சாட்சிகர மரணத்திலிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடம் என்ன?

பாஸ்கரன் : கேசவன் ரத்தம் இல்லாத சாட்சி என்கிறதுதான். கேசவனோட உடம்பிலே ஒரு சொட்டு ரத்தம் கூட இல்லே.

தலைவர் : சொன்னேனில்லே, இந்த லாகவ புத்தி கூடாதென்று. கேசவனைப்போல எத்தனையோ யானைகள் கடவுள் சிலைகளைச் சுமந்தும், நாலு கோயில்களைச் சுற்றியும் வாழ்க்கையைப் பாழாக்கிக் கொண்டிருக்கின்றன. தலைமுறைகளாக!

சங்குநாயர் : (தொலைவிலிருந்து) "இனிமே நான் அங்கே வரலாமில்ல? டேய் பாசுக்கரா, அந்த அதிகப் பிரசங்கி என்ன செய்றாண்டா?"

பாஸ்கரன் : சொற்பொழிவாற்றுகிறாரு.

சங்குநாயர் : "நே?"

பாஸ்கரன் : பிரசங்கம் பண்றாருன்னேன்.

சங்குநாயர் : இன்னிக்கு நான் அவனோட கதையை முடிச்சிடறேன். கொன்னு தொலைச்சிடுறேன் கசுமாலத்தை!

தலைவர் : (திகைத்து) யாரு, யாரு அது?

பாஸ்கரன் : (அந்தப் பக்கமாகத் திரும்பிப் பார்த்து) சங்குநாயர். கேசவனோட மாவுத்தன்.

தலைவர் : பிரசங்கம் பண்ணா கொன்னு தொலைச்சிருவேன்னு சொன்னது?

பாஸ்கரன் : அது கேசவனைப் பத்திச் சொன்னது. அவங்களுக்குள்ளே ஏதோ சின்ன ஊடல்.

தலைவர் : ஓ, அவ்வளவுதானா? நான் என்னமோ ஏதோன்னு நெனச்சேன்... (முன்பக்கமாக நகர்ந்து வந்து மீண்டும் மீண்டும் எட்டிப்பார்த்து) அங்கே கொஞ்சம் ஆட்கள் இருக்கிறாங்க இல்லையா?

பாஸ்கரன் : டீக்கடை, நாற்சந்தி, கள்ளுக்கடை இங்கேயெல்லாம் அரட்டையடிக்கிற மதிப்புக்குரிய பொதுமக்கள் இருக்கிறாங்க.

(தலைவர் யாரையோ தேடுவதுபோல் சுற்றும்முற்றும் பார்க்கிறார்)

யாரைப் பார்க்கிறீங்க?

தலைவர் : ஒரு போட்டோகிராபரை வரச் சொல்லியிருந்தேன். நான் கேசவனோடு இருக்கிற மாதிரி ஒரு படம் எடுக்கிறதுக்காக. இது தேர்தல் சமயமில்லையா? என்ன நான் சொல்றது! ஆனால், இவனை நம்பி மட்டும் ஒரு காரியமும் பண்ண முடியாது. இருந்தாலும் கிடைச்ச சந்தர்ப்பத்தை விட்டுவிடக் கூடாதில்லே. (மெகபோனைப் பிடித்துக்கொண்டு இயற்கைக்கு மாறான தனது குரலில்) பெருமதிப்பிற்குரிய பொது மக்களே, சுதந்திரப் போராட்ட வீரரும், தியாகச் செம்மலும், இந்தத் தேர்தலில் மக்கள் வேட்பாளருமான திருவாளர் காட்டாங்குளத்து குட்டி இப்போது உங்களுடன் பேச இருக்கிறார்.

பாஸ்கரன் : இப்போது அறிவிப்பு செய்தது வேறே யாரு, திருவாளர் காட்டாங்குளத்து குட்டிதானே?

தலைவர் : (பேசாமல் இரு' என்பதாக சாடைகாட்டிவிட்டு, தனது இயல்பான குரலில், கனகம்பீரத்துடன்) அன்புள்ள ஊர்ப்பொதுமக்களே, நண்பர்களே! கேசவனுடைய உடல் நலமின்மையால் சோகம்...

பாஸ்கரன் : எப்படி... எப்படி...?

தலைவர் : (நிறுத்தாமல் தொடர்ச்சியாக) கொண்டிருக்கிறீர்கள் நீங்கள் எல்லாருமே. கேசவனுடைய உடல் நலமின்மையைப் பற்றி ஒரு பத்திரிகையில் படிக்க நேர்ந்தபோது நடுங்கிப் போனேன். சுமார் அறுபது வருட கடின உழைப்புத்தான் கேசவனை இந்த நிலைக்கு உள்ளாக்கியிருக்கிறது. அந்தக் கர்ம யோகியின் இன்றைய பரிதாப நிலை குறித்து வேதனைப்படாதவர்கள் இருப்பார்களானால் அவர்கள் இதயம் இல்லாதவர்களே ஆவார்கள். கேசவனுக்கு என்ன வியாதி.

சங்குநாயர் : (தொலைவிலிருந்து) சிரங்கு, சொறிசிரங்கு, எவண்டா அங்கே கேசவனைப் பத்திப் பேசறது?

தலைவர் : (பணிவுடன்) உங்களுடைய அன்புக்குரிய வேட்பாளன் தான் இந்த எளிய ஊழியன். (மீண்டும் குரலை உயர்த்தி) இந்த வியாதியின் அடிப்படைக் காரணத்தைத் தான் நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இந்த மதச்சார்பற்ற ஜனநாயக நாட்டில்...

பாஸ்கரன் : மதச்சார்பில்லை... மதச்சார்பு-சார்பு-ர்பு-பு-

தலைவர் : ஆமாம், அதுதான், மதச்சார்... மதச்சார்பற்ற நாட்டில் யானைகளைக் கோயில்களில் தன்னலக் காரியங் களுக்காகக் கட்டிப்போடுவதை அனுமதிப்பது தவறு. மற்ற மதக்காரர்களிடம் காண்பிக்கும் மாற்றாந்தாய் மனப்போக்கு இது. கிறிஸ்தவக் கோயில்களிலோ, முஸ்லீம் பள்ளிவாசல்களிலோ ஆனைகள் உண்டா என்றுதான் நான் கேட்கிறேன். இந்த மேட்டுக் குடிகளை ஆதரிக்கும் வர்க்க ரீதியான...

பாஸ்கரன் : (கோபத்துடன்) அதெல்லாம் சரிதான். மதத்தைக் காரணமாச்சொல்லி, மனுசங்களுக்குள்ளே அடிதடி உண்டாக்கி வோட்டு வாங்கத்தானே வந்திருக்கீரு! அதெல்லாம் இங்கே வச்சிக்கிட வேணாம்.

தலைவர் : (வருத்தப்பட்டு பாஸ்கரனிடம் மன்னிப்புக் கேட்கும் தோரணையில் ஜாடை காண்பித்துவிட்டுத் தொடர் கிறார்) தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்துவரும் இந்த நிலவுடைமை பாரம்பரியத்தை இனிமேலும் வைத்துக்கொண்டு போற்றிப் பாதுகாக்க வேண்டுமா என்றுதான் நான் கேட்கிறேன். எத்தனையோ யானைகள் இப்படித் தலைமுறை தலைமுறையாகக் கடவுளர்களின், குட்டிதேவதைகளின் விக்கிரகங் களைச் சுமந்துகொண்டு கோயில்களின் நான்கு சுவர் களுக்குள் சங்கிலிகளால் கட்டுண்டு கிடக்கின்றன.

பாஸ்கரன் : எத்தனையோ துஞ்சன்மாரும் குஞ்சன்மாரும்!

தலைவர் : சுவாமி ஊர்வலம், கும்பாபிஷேகம் முதலான வெட்டி வேலைகளுக்குப் பயன்படுத்தாமல் காட்டில் மரத்தடி களைச் சுமத்தல், சர்க்கஸ், பாறைகளை உடைத்தல் போன்றதான நாட்டுநலப் பணிகளில் யானைகளைப் பயன்படுத்தும் காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. கடந்துபோன ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் இந்த அரசு யானைகளுக்காக என்ன செய்திருக்கிறது என்று தான் நான் கேட்கிறேன். யானைத் தொழிலாளிகளுக்கு இந்த ஆட்சி இதுவரை என்ன செய்திருக்கிறது?

சங்குநாயர் : நல்லாக் கேளுடா, மகனே, நல்லாக்கேளு. நீதாண்டா ஆம்பிளைச் சிங்கம்.

தலைவர் : (உற்சாகத்துடன்) யானைகளுடைய நிலையை உயர்த்தாமல் எந்த சோஷலிசத்தை இங்கே நடைமுறைப் படுத்தப்போகிறீர்கள்? ஒரு சோஷலிச சமுதாயத்தை உருவாக்க வேண்டுமென்றால் முதலில் தேவைப் படுவது யானைகளைப் பொதுத்துறையின் கீழ் கொண்டு வருவதுதான் ஆகும். தன்னலக்காரர்களின் மற்றும் தனியார் துறையின் சுரண்டல்களிலிருந்து யானைகளை விடுவிக்க வேண்டியது தேவை என்ற கருத்தை நான் உங்கள் முன் வைக்கிறேன். ஒரேயொரு யானையை மட்டும் தனியாரிடமிருந்து காப்பாற்றிப் பயனில்லை. எல்லா யானைகளையுமே தேசிய மயமாக்கிவிட வேண்டும்.

(தொலைவிலிருந்து குரல்: "இன்குலாப் ஜிந்தாபாத்! யானைகளை தேசியமயமாக்குக! யானைகளை தேசியமயமாக்குக!")

உங்களுடைய அபிப்பிராயங்களையும் ஆர்வத்தையும் ஏற்றுக்கொண்டு, இந்தப் பிரச்சினையின் பேரில் ஒரு போராட்டத்தை நடத்திக் காட்ட நான் தலைமை ஏற்கிறேன். தேவைப்பட்டால் என்ன பின் விளைவுகள் வந்தாலும் ஒருநாள் உண்ணாவிரதம் இருக்கவும் தயார்.

பாஸ்கரன் : ஒருநாள் உண்ணாவிரதம் இல்லை, சாகும்வரை உண்ணாவிரதம்.

தலைவர் : அதேதான், சாகும்வரை உண்ணாவிரதம். அதை நடத்திக்காட்டவும் நான் தயார் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

சங்குநாயர் : (தொலைவிலிருந்து) "யானைப்பாகனோட உண்ணா விரதமாடா? யானைகளை அரசாங்கம் எடுத்துக் கிட்டா யானைப்பாகன் என்னடா செய்வான்?"

தலைவர் : யானைத் தொழிலாளிகளுக்கு வேலை நிரந்தரம், போனஸ், பென்ஷன் முதலான எல்லா சலுகைகளும் கிடைக்கச் செய்ய வேண்டும். ஒற்றுமையற்றிருக்கும் யானைத் தொழிலாளிகள் அனைவரும் ஒரே கட்டுக் கோப்பாய் இருந்து போராடினால் வெற்றி நமதே.

குரல் : "ஹியர், ஹியர்!"

பாஸ்கரன் : யானைத் தொழிலாளிகள் ஜிந்தாபாத்!

(தொலைவிலிருந்து குரல்: "ஸ்கூல் கட்டுவதற்கு வசூலித்த பணத்தோட கணக்கு வேணும்.")

தலைவர் : யானை தேசியமயமாகிவிடுமானால்...

(பல குரல்கள்: "கணக்கு வேணும், கணக்கு வேணும். ஸ்கூல் விழுங்கி முர்தாபாத். ஸ்கூல் விழுங்கி முர்தாபாத்!")

சோஷலிசத்தைக் கொண்டுவரவும், யானைத் தொழிலாளிகளுக்கு வேலை...

(குரல்கள்: "கணக்கு வேணும், கணக்கு வேணும். ஸ்கூல் விழுங்கி..." தொடர்ந்து கூச்சல் கேட்கிறது.)

நிரந்தரம் செய்வதற்காகவும் அடுத்து வரும் தேர்தலில் நீங்கள் எனக்கு வோட்டுப் போடுங்கள். என்னுடைய கைகளை வலுப்படுத்துங்கள். உங்களுக்கு என் நன்றி.

(கூச்சல் தொடர்கிறது. தலைவர் மேடையின் நடுவில் போய் நிற்கிறார்.)

பாஸ்கரன் : (மைகபோனைத் தலைவரின் கையிலிருந்து வாங்கிக் கொண்டு, தலைவரிடம்) நானும் ரெண்டு வார்த்தை பேசிக்கிறேன். (சந்தைப்பகுதிக்கு நேராகத் திரும்பி நின்று, கூச்சலிட்டவர்களை நோக்கி) நண்பர்களே, நான் பாஸ்கரன். வேட்பாளரிடம் நீங்களெல்லாரும் கொண்டிருக்கும் இந்தக் கள்ளங்கபடமற்ற அன்பை அடிப்படையாகக் கொண்டு நானும் இரண்டு வார்த்தைகள் பேச விரும்புகிறேன்.

(கூச்சல் அடங்குகிறது.)

(தலைவரின் சொற்பொழிவைப் பின்பற்றிப் பேசும் தோரணையில்) யானைகளே, யானைத் தொழிலாளர் களே, மற்றுள்ளோரே! யானைகளின், யானைத் தொழிலாளர்களின் பிரச்சினைகளை நமது பேரன்பிற் குரிய வேட்பாளர் தீர்த்துவைக்கப் போவதாகக் கூறினார். ஒரு யானையாகவோ, மாவுத்தனாகவோ பிறப்பெடுக்கும் பாக்கியமில்லாத என்னைப் போன்ற வர்களின் பிரச்சினையையும் இந்த சந்தர்ப்பத்தில் நமது அன்பார்ந்த வேட்பாளரின் கவனத்திற்குக்

கொண்டு வருகிறேன். படித்துவிட்டு வேலையில்லா திருக்கும் எங்களைப் போன்றோருக்கு மாவுத்தன் உத்தியோகமாவது தர வேண்டும். அல்லது, யானை களுக்கு பதிலாக எங்களைத் திருவிழா, சுவாமி ஊர்வலம் முதலான தெய்வீகக் காரியங்களுக்கு அல்லது சர்க்கஸ், பாறை உடைத்தல், மரத்தடிகளை எடுத்துச் செல்வது போன்ற நாட்டு முன்னேற்றத் திட்டங்களுக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். (கொஞ்சம் நிறுத்திவிட்டு கூட்டத்தாரிடம்) கரவொலி எழுப்புங்கள், முழக்கம் செய்யுங்கள்!

(கைதட்டல். தலைவர் முறைக்கிறார்)

யானைகளை நாட்டுடைமையாக்கும்போது மாவுத்தர் களின் குறைந்தபட்சக் கல்வித்குதி பி.ஏ. என்றாவது இருக்க வேண்டும். மாவுத்தனை நியமிக்கும் அதிகாரம் சர்விஸ் கமிஷனின் கையில் இருக்க வேண்டும். கையூட்டு, சிபாரிசு போன்றவை இல்லாத காரணத் தால் பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் எந்த வேலையும் கிடைக்காதவர்களுக்கு மாவுத்தன் வேலை அளிக்க முன்னுரிமை தர வேண்டும். கைதட்டுங்க. (கேட்டுக்கொண்டிருந்தோரின் கரவொலி)

சங்குநாயர் : (தொலைவிலிருந்து) "நிறுத்துடா கிறுக்கா. படிச்சவ னெல்லாம் மாவுத்தனாயிட்டா அப்புறம் என்னை மாதிரி இருக்கிறவங்க என்னடா பண்றது?"

பாஸ்கரன் : மிஸ்டர் சங்குநாயர் தவறாகப் புரிந்துகொண்டு விட்டார். சங்குநாயரைப் போன்ற எழுத்தறிவற்ற வர்களான எல்லா மாவுத்தர்களையும் அவர்கள் வேலையிலிருந்து ஓய்வு பெறும்வரை பணிநீக்கம் செய்துவிடாமல் முழுப் பாதுகாப்பு தரப்படும். கைதட்டுங்கள்!

(கூட்டத்தில் உள்ளவர்களின் கரவொலி, ஹியர், ஹியர் கூச்சல். பாஸ்கரன் தொடர்ந்து) கல்வி என்பது தொழிலை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டு மென்று நாம் சுதந்திரம் பெறுவதற்கு முன்பிருந்தே கூறிக்கொண்டிருக்கிறோம் அல்லவா? ஆனால் நான் இப்போது கேட்பதெல்லாம், எங்கேயாவது ஒரு பள்ளிக்கூடத்திலோ கல்லூரியிலோ யானை

யேற்றமோ, யானையைச் சங்கிலியால் கட்டும் முறையோ முக்கியப்பாடமாக அல்லது துணைப் பாடமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறதா என்பதுதான். கலையும் அறிவியலும் படித்துவிட்டு என்னைப் போன்று வேலையில்லாமல் திண்டாடுவது போன்று, யானையேற்றமும் யானைச்சங்கிலிப்பிணைப்பும் பற்றிப் படித்துவிட்டு வேலை தேடி அலைந்து கொண் டிருக்க வேண்டுமா என்பதுதான் இங்கு முதன்மை யானதும் முக்கியமானதுமான பிரச்சினையாகும்.

(குரல்: "ஹியர், ஹியர்")

மாவுத்தன் உத்தியோகத்தில் இன்று நடைமுறையில் இருக்கிற மற்றொரு அநீதியையும்கூட நம்முடைய வேட்பாளரின் கவனத்திற்குக் கொண்டுவர ஆசைப் படுகிறேன். கொடூரமான ஆணாதிக்கம்தான் யானைத் தொழிலில் இன்று காணப்படுகிறது. இந்த முரண் பாட்டைக் களைந்து மகளிர் மாவுத்தர்களையும் நியமிக்க வேண்டுமென்றும், அவ்வாறாகப் பாலின சமத்துவத்தை நிறுவ வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

(தலைவர் பெரிதும் குழப்பமடைந்து மதிகலங்கி பாஸ்கரனுடைய கையிலிருந்து மெகபோனைத் திருப்பி வாங்க முயல்கிறார்.)

(சொற்பொழிவு தொடர்கிறது) படித்துத் தேர்ந்த ஆண்பெண்களை மாவுத்தனாகவும் மாவுத்தளாகவும் நியமித்து நாட்டு நலப்பணிகளில் பங்கேற்கச் செய்யும் போதுதான் உண்மையான முன்னேற்றம் காண முடியும் என்பதைச் சொல்லி இத்துடன் என் சொற்பொழிவை முடித்துக் கொள்கிறேன். உங்கள் எல்லோருக்கும் என் நன்றி! (உரத்த குரலில்) யானை களை தேசியமமாக்குக! பட்டதாரிகளை மாவுத்தர் களாக்குக!

(கூட்டத்திலிருப்பவர்கள் பாராட்டி ஆர்ப்பரிக் கிறார்கள்)

(மெகபோனைத் தலைவரிடம் திருப்பிக் கொடுக் கிறான்.) என்ன, சொற்பொழிவு எப்படி இருந்தது?

(மறுபுறத்தில், கோயிலில் மணியடிக்கும் ஓசை, சங்கு ஒலிக்கும் ஓசை ஆகியன கேட்கின்றன. அவற்றுடன் பக்தர்களின் பிரார்த்தனை ஒலியும் கேட்கிறது... 'கடவுளே, ஆண்குழந்தையைக்கொடு', 'ஒரு வேலை கிடைக்க அனுக்கிரகம் பண்ணு', 'செலக்ட் ஆயிட்டா பால்பாயசம் படைக்கிறேன்', 'வரி வசூலிக்க வருகிறவனைப் பாம்பு பிடுங்கணும்', 'பங்கஜ வல்லிக்குத் தகுந்த ஒரு மாப்பிள்ளை கிடைக்கணும், தெய்வமே', 'அவரோட குடியை நிறுத்தணும்', 'பெண்டாட்டிக்கு நல்ல புத்தியைக் கொடு'. ஆண் பெண் கூச்சலில் இவையெல்லாமே தெளிவாகக் கேட்கும் பிரார்த்தனைகள்.)

தலைவர் : என்ன, கோயில்ல பெருங்கூட்டமா இருக்கு?

பாஸ்கரன் : பக்தருங்க, பஜனைக்காரங்க, ஏகாதசிக்காரங்க, உபவாசம் இருக்கிறவங்க.

தலைவர் : சரியான கூட்டமா இருக்கும் போலிருக்கே! இந்த போட்டோகிராபர் எங்கே போய்த் தொலைஞ்சானோ தெரியலையே (மெகபோனை எடுத்துக்கொண்டு கோயிலை நோக்கி இரண்டடி எடுத்து வைக்கிறார்.)

பாஸ்கரன் : (மீண்டும் சொற்பொழிவாற்றப்போகும் தலைவரின் தவிப்பைக் கண்டு) இது தேவைதானா?

தலைவர் : எது?

பாஸ்கரன் : வேணாம். இனிமே இது வேணாம்கிறேன். பக்தருங்க கூப்பாடு போட்டா தொந்தரவாய்ப் போயிரும்.

தலைவர் : இதைவிடப் பெரிய தொந்தரவு எவ்வளவு பார்த்திருக்கிறேன்! இது எம்மாத்திரம்! (குரலை சரிப்படுத்திக்கொண்டு சொற்பொழிவைத் தொடங்குகிறார்) அன்பார்ந்த பொதுமக்களே, பக்த சிரோன்மணிகளே! ஏறத்தாழ அரை நூற்றாண்டுக்காலம் பெரும்புகழுடன் பல கடவுளர்களின், அம்மன்களின் விக்கிரகங்களைச் சுமந்து தெய்வங்களின் மற்றும் பக்தகோடிகளின் அன்புக்கும் பாசத்துக்கும் பாத்திரமான நம்முடைய கேசவனின் இன்றைய இழிநிலையைக் கண்டு நாமெல்லாம் துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறோம். கேசவன் மிக விரைவில் உடல்தேற வேண்டும் என்று

பிரார்த்தித்துக் கொள்வதுடன், நம்முடைய மகத்தான கலாச்சாரப் பாரம்பரியத்திற்கு ஏற்ப வருங்காலத் தலைமுறைக்குக் கடவுள் பக்தியும் மதப்பற்றும் உண்டாவதற்கு என்னவெல்லாம் செய்ய வேண்டு மென்று சிந்திக்க வேண்டியிருக்கிறது.

பாஸ்கரன் : வருங்காலத் தலைமுறையையும் விடறதா இல்லை யாக்கும்!

தலைவர் : (சொற்பொழிவைத் தொடர்ந்தவாறு) வலுவான இந்த அடிப்படையில் கேசவனைப் போன்றவர்கள் நமக்குத் தேவை. நிலவுடமைச்சமூகத்தில் இருந்ததைப் போல கேசவனைப் போன்றவர்களைக் கோயில்களுக்குள் கட்டிவைத்தால் அது அறிவுக்குப் பொருந்துமா என்பதை நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தேசியமயமாக்கி யானைகளையெல்லாம் பொது வுடைமையாக்க வேண்டும். இந்த மாதிரியான புதியதொரு ஏற்பாடு...

(பக்தர்களின் குரல்:

**"ஹரிநாராயண கோவிந்தா**
**தேசியமயம் வேண்டாம் வேண்டாம்**
**யானையிடம் விளையாட்டு வேண்டாம்**
**ஹரிநாராயண..."**

(பேச்சை மாற்ற முயன்று) நீங்கள் தவறாகப் புரிந்து கொண்டீர்கள். எல்லாக் கோயில்களுக்கும் யானைகள் கிடைக்கும் விதமாகவும், அதாவது ஒரு கோயிலுக்கு மட்டும் யானைச் செலவுகள் பாரமாக இல்லா திருக்கும் விதமாகவும்...

(பக்தர்களின் குரல்)

**"ஹரஹர மகாதேவ,**
**கேசவயானை தெய்வ யானை**
**கோவில்தோறும் யானைகள் வேண்டும்**
**ஹரஹர மகாதேவ..."**

பாஸ்கரன் : இவங்க சம்மதத்தை வாங்கிக்கிட்டு தேசியமய மாக்குவது என்பது முடியாது.

தலைவர் : ஒரு மதச்சார்பற்ற நாட்டில்...

பாஸ்கரன் : ..ம்.. மதச்சார்பற்ற..

தலைவர் : எல்லோருக்கும் அவரவர் நம்பிக்கையையும் ஆசார நியமங்களையும் கடைப்பிடிக்க உரிமை உண்டென்று மகாத்மா காந்தியும் லூயிபாஸ்டரும் கூறியிருக்கின்றனர். கோயிலில் யானையை வைத்திருப்பது என்பது கேள்வி கேட்க முடியாத இந்து மத ஆசாரமாகும். நம்முடைய அடிப்படை உரிமைகளில் ஒன்று இது. சட்டதிட்டங்களும் இதை அங்கீகரித்திருக்கின்றன. மதச்சார்பற்ற அரசில் நம்பிக்கை கொண்டிருப்பவனும் ஒரு பக்தனுமான நான் கோயில் மற்றும் கேசவனின் நன்மையைக் கருதி எந்த தியாகத்தையும் செய்யக் காத்திருக்கிறேன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாஸ்கரன் : இடதுசாரியிலிருந்து வலதுசாரி திருத்தல்வாதத்திற்கு!

தலைவர் : தேசியமயம் வந்தால்கூட தேவஸ்தான யானைகளை அதிலிருந்து விடுவிக்க உங்களுடன் சேர்ந்து நானும் போராட்டத்தில் இறங்குவேன். யானைகளை நாட்டு உடமையாக்குவதிலுள்ள நோக்கம்தான் எனக்குப் புரியவில்லை. தனியார் துறையில் யானைகளுக்கும் மாவுத்தர்களுக்கும் பிரத்தியேகப் பாதுகாப்பும் வசதிகளும் கிடைக்கப்பெறுவதால் யானையை நாட்டுடைமையாக்கல் என்ற குழப்பத்தில் அரசாங்கம் இறங்க வேண்டாம் என்று அரசாங்கத்திற்கு நான் எச்சரிக்கை விடுக்கிறேன். அரசாங்கம் தீயுடன் விளையாட வேண்டாம்!

பாஸ்கரன் : (சங்குநாயரும் பிறரும் நின்றுகொண்டிருக்கும் பகுதியைச் சுட்டிக்காட்டி.) அதோ அவங்களும் கேட்டுக்கிட்டிருக்காங்க.

தலைவர் : (ஏறத்தாழக் கோயில் பக்கமாக ஒதுங்கி நின்று சிறிது தாழ்ந்த குரலில்) உங்கள் அன்புக்குரிய வேட்பாளனாகிய எனக்கு நீங்கள் போடும் ஒவ்வொரு வோட்டும் நம்முடைய தேவஸ்தான யானைக்காக வேண்டிப் போடுகின்ற வோட்டாக இருக்கும். யானை தேசியமயமாக்கப்படுவதை நான் வன்மையாக எதிர்க்கிறேன் என்பதை உங்களிடம் உறுதிப்படுத்துகிறேன். அது மட்டுமல்ல, கேசவனை சுவாமி ஊர்வலத்திலிருந்து

ஒதுக்கி வைக்க வேண்டுமென்ற கெட்ட நோக்கம் கொண்ட நடவடிக்கையினால் பொதுமக்களுக்குத் துரோகம் செய்த நாட்டாமையின் மீது ரகசிய விசாரணை நடத்தவேண்டும். அதற்கு உச்சநீதிமன்ற நீதிபதிக்கு குறையாத ஒருநபர் கமிஷனை நியமிக்க வேண்டுமென்று நான் அரசாங்கத்தை வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன். ஒரு நேரடிப் போராட்டத்தைத் தவிர்க்க அரசாங்கம் விரும்புமானால் உடனே கமிஷனை நியமிக்க வேண்டுமென்று நான் இதன்மூலம் அறிக்கை விடுக்கிறேன். உங்கள் எல்லோருக்கும் என் நன்றி. வணக்கம்!

*(குரல்:)*

**"சம்போ சங்கர கௌரீசா**
**எங்கள் ஆதரவு உங்களுக்கு**
**சாம்பசிவ சங்கர கௌரீசா**
**தேவஸ்தானத்துக்கு யானைகள் வேண்டும்."**

*(தலைவர் வெற்றியடைந்த பாவனையில் பாஸ்கரனைப் பார்க்கிறார்.)*

பாஸ்கரன் : அப்படீன்னா தேசியமயமாக்குறதா, தேசியமய மாக்காமல் இருக்கிறதா, எது இந்தப் பொதுக் கூட்டத்தோட முடிவு?

தலைவர் : பேசாமல் இருக்கணும்! தேசியமயமாக்கம்! ஒருநபர் கமிஷன்! தீவட்டி!

பாஸ்கரன் : பக்தகோடி மக்கள்கிட்டயே தேர்தல் உணர்வை உண்டாக்கிட்டீங்களே, அது போதுமே. மேட்டுக்குடி வர்க்கத்தாரை எதிர்த்துப் பேசிப் பத்து நிமிஷம்கூட ஆகலே.

தலைவர் : ஜாதி சார்ந்து இருக்கக் கூடாதுன்னு பிரசங்கம் பண்ண வேண்டியதுதான். ஆனால் அவங்க ஆதரவு நமக்கு எப்பவும் வேணும். ஜாதிகளை எதிர்த்துப் பேசிக்கிட்டு, அதே சமயத்திலே அவங்களைக் கூட்டுச் சேர்த்துக்காத ஒரு அரசியல் கட்சியை யாராச்சும் சொல்ல முடியுமா?

பாஸ்கரன் : அது சரிதான். கூட்டுறவு விவசாயமும் கூட்டுறவுத் தொழிலும் போல, கூட்டணி அரசியலும் நமக்கு

வேண்டியதுதான். அது ஜாதிக்காரங்களுக்கு மரியாதை யையும், மாண்புமிகுக்கள், எல்லாம் ஒரு ஜாதி என்கிற பாங்கையும் தருகிறது.

தலைவர் : ஆட்சிநிர்வாகம் மதச்சார்பின்மை...

பாஸ்கரன் : மதச்சார்பின்மை..

தலைவர் : ஆமாம், இந்த மதச்சார்பின்மை மதச்சார்பின்மை என்று சொல்கிறோமே, அது என்னன்னு தெரியுமா?

பாஸ்கரன் : என்னவாம்?

தலைவர் : மத ஆச்சாரங்களுக்குத் தடையாக இல்லாமலிருப்பது. சட்டதிட்டங்களிலும் முரண்பாடுகளிலும் அது ஒரே மாதிரி உறுதிபட நிற்பதாகும். அதனால் தங்களோட யானைகளைக் கட்டிவைக்க எந்த மதத்தவருக்கும் உரிமை இருந்தாக வேண்டும். என்ன? அப்போது தேசியமயமாக்கலிலிருந்து தேவஸ்தான யானைகளுக்கு விலக்களிக்கிறதும் மதச்சார்பின்மைதானாகும். என்ன? சொன்னது புரிஞ்சுதா?

பாஸ்கரன் : புரிஞ்சது. அப்போ பொதுத்துறையிலே வேகன்சிகளின் எண்ணிக்கை குறையும். எண்ணிக்கை குறைஞ்சா என்னைப் போன்றவங்க ஃபீல்டிலே நிரந்தரம்.

தலைவர் : அதில்லே. தேவஸ்தான யானைகளுக்கு சர்வீஸ் கமிஷன் தேர்ந்தெடுக்கும் மாவுத்தர்களை மட்டுமே நியமிக்க முடியும் என்கிற நிபந்தனையை வைக்க முடியும். அதிலென்ன கஷ்டம்? தம்பியோட விஷயத்தை நான் கவனிச்சிக்கிறேன். சே! இந்த போட்டோகிராபரை வரச்சொல்லியும் அவனை இன்னும் காணோமே? அப்படீன்னா நான் கிளம்ப வேண்டியதுதான்.

பாஸ்கரன் : அது சரி, நீங்க வந்தது கேசவனோட நோயைப் பற்றி விசாரிக்கத்தானே?

தலைவர் : இல்லையா பின்னே! அவன் மீதான உணர்ச்சிகளைப் பதிவாக்கிடத்தான் என்னோட வருகை.

பாஸ்கரன் : ஆனா அவனைப் பற்றி ஒண்ணும் விசாரிக்கவே இல்லையே?

தலைவர் : என்ன தனிப்பட விசாரிக்கிறது? கேசவன் உள்ளிட்ட

சமுதாயத்தின் அவலத்தைத் தடுத்து சரிசெய்யும்போது கேசவனோட அவலமும் தீர்ந்துபோகும். இந்த அவலத்தின் வரலாற்றுப் பூர்வமான காரணங்களைக் குறித்து--

(போட்டோகிராபர் நுழைகிறார்.)

அடடா! எவ்வளவு நேரமாக் காத்துக்கிட்டிருக்கேன்! சீக்கிரமா ஒரு நல்ல படம் எடும். நாளைப் பத்திரிகையிலே வர்ற மாதிரி இருக்கணும்! (பாஸ்கரனிடம்) எதிர்க்கட்சி வேட்பாளர் யாராச்சும் வந்தாங்களா?

பாஸ்கரன் : வரல்லே. ஒருவேளை இனிமே வரலாம்.

தலைவர் : வந்தாலும் போட்டோ எடுக்க யாரும் சம்மதிக்காதீங்க. (வேண்டிக்கொள்ளும் பாவனையில்) தம்பி கொஞ்சம் இதிலே கவனமா இருக்கணும். இந்தா பாரு, மத்ததெல்லாம் நான் பார்த்துக்கறேன்.

பாஸ்கரன் : கவனிச்சிக்கிடுங்க! ஆனாலும் நேரமும் வரணுமில்ல! சரி, அங்கே போய்ச்சேர்ந்து நில்லுங்க. போட்டோ எடுக்கட்டும்.

தலைவர் : தொல்லைப்படுத்துவானோ?

பாஸ்கரன் : தொல்லைப்படுத்தறதா? அதெல்லாமில்லே, அகிம்சாவாதிதான். வாய்க்குள்ளே தலையை விட்டா கடிக்காத சுபாவமாக்கும்.

(பாஸ்கரன் உற்சாகப்படுத்தியதை அனுசரித்து தலைவர் பின்பக்கமாகவே நகர்ந்து செல்கிறார். சிரமப்பட்டு உருவாக்கிக் கொண்ட சிரிப்புடன் கேசவனின் தும்பிக்கையை ஒட்டிச் சேர்ந்து நிற்கிறார். மெகபோனைத் தரையில் வைக்கிறார். கவனம் முழுவதும் காமிராவில் இருக்கிறது. யானை திடீரென்று தும்பிக்கையை வளைத்துத் தலைவரை நெருக்கும் விதமாகப் பிடிக்கிறது. ஒரு கூக்குரலுடன் தலைவர் கண்ணும் நாக்கும் பிதுங்க ஸ்தம்பித்து நிற்கிறார். பாஸ்கரனை அலமந்து நோக்குகிறார். போட்டோகிராபர் பயந்து ஓடுகிறான்.)

(சிரித்தபடி) அவன் பிரியத்தினாலே கட்டிப்பிடிச்சிக்கிட்டான். அதுக்குப்போய் இப்படி பயப்படலாமா? (கேசவனிடம்) நீ கோபமா இருக்கியா?

(யானை 'ஆமாம்' என்பது போலத் தலையை ஆட்டுகிறது.) ஓ, இவரு காலாகாலத்திலே உன்னை விசாரிக்க வரல்லேங்கிற கோபமா? (கேசவன் 'இல்லை' என்பதாகத் தலையாட்டுகிறது.)

குழப்பமாயிடுச்சே! சரி, எனக்குச் சின்னதா ஒரு சந்தேகம் தோணுது. கேட்கட்டுமா? கோவிச்சிக்கக் கூடாது.

தலைவர் : (வேதனையும் பயமும் கலந்து தளர்ந்துபோய்) கேளு, என்ன வேணும்னாலும் கேளு.

பாஸ்கரன் : கேசவா, இவரு ஒரே மூச்சிலே ஒண்ணுக்கொண்ணு முரண்பாடான ரெண்டு கருத்துக்களைப் பிரசங்கம் பண்ணி ஆட்களைக் குழப்பறதுக்கு முயற்சி செஞ்சது தானே உன் கோபத்துக்குக் காரணம்?

(கேசவன் 'ஆமாம், ஆமாம்' என்று தலையாட்டுகிறது)

பார்த்தீங்களா, எனக்குத் தெரியும் அவனோட சுபாவம். சத்தியசீலனா இருக்கிறதாலே வயசானாலும் கள்ளத்தனத்தைப் பொறுத்துக்க முடியலே. இனிமே எந்த வழியிலும் தப்பிக்க முடியாது.

(தலைவர் கெஞ்சும் பாவனையில் நோக்குகிறார்.)

சரி, நான் சொல்றதுபோலச் செய்வீங்களா?

(செய்கிறேன் என்பதான அர்த்தத்தில் தலைவர் தலையாட்டுகிறார்.)

சத்தியமா?

(தலைவர் விழிபிதுங்கத் தலையாட்டுகிறார்.)

(கேசவனிடம்) கேசவா, மன்னிப்புக் கேட்டா விட்டிருவியா?

(கேசவன் விடமுடியாது என்பதுபோல் தலையை மறுதலிப்பாக ஆட்டித் தலைவரை மேலும் நெருக்குகிறது.)

அவனுக்குத் திருப்திப்படலே போலிருக்கு. போகட்டும், இனிமேலே மனுசங்களைக் குழப்புறதில்லேன்னு சத்தியம் பண்ணினா விட்டிருவியா?

(சம்மதித்து கேசவன் தலையாட்டுகிறது)

(தலைவரிடம்) அப்பாடி! கேசவன் சம்மதிச்சிட்டான். என்ன சத்தியம் பண்ணுவீங்களா?

(தலைவர் "ஒரு சின்ன..." என்று சொல்லத் தொடங்கி ஏதோ ஒரு முரண்பாட்டை வெளிப்படுத்த முயல் கிறார். கேசவனின் பிடி இறுகுகிறது. வேதனையுடன் தலைவர் சம்மதம் தெரிவிக்கிறார்.)

அப்படீன்னா நான் சொல்றேன். அதை அப்படியே திருப்பிச் சொல்லணும். மண்மீது ஆணை.

தலைவர் : மண்மீது ஆணை.

பாஸ்கரன் : பொன்மீது ஆணை.

தலைவர் : பொன்மீது ஆணை

பாஸ்கரன் : குலம் காக்கும் பரதேவதை மீது ஆணை.

தலைவர் : குலம் காக்கும் பரதேவதைமீது ஆணை.

பாஸ்கரன் : கட்சிவிட்டு கட்சி மாறுவதோ....

(தலைவர் சொல்வதற்குத் தயங்குகிறார். யானையின் பிடி இறுகுகிறது. வேறு வழியின்றி தலைவர் வழிமொழிகிறார்.)

மனத்தாலும் வாக்கினாலும் செயல்களினாலும் மனிதர்களைச் சுரண்டுவதோ இல்லை.

தலைவர் : இல்லை.

(கேசவனின் பிடி இறுகுகிறது.)

பாஸ்கரன் : மனத்தாலும் வாக்கினாலும் செயல்களினாலும் மக்களைச் சுரண்டுவது இல்லை.

தலைவர் : மனத்தாலும் வாக்கினாலும் செயல்களினாலும் மக்களைச் சுரண்டுவது இல்லை.

பாஸ்கரன் : சத்தியம், சத்தியம், சத்தியம்.

தலைவர் : சத்தியம், சத்தியம், சத்தியம்.

(தலைவரைக் கேசவன் விடுவிக்கிறது. தலைவர் விலகிச் சென்று நின்று கையையும் காலையும் உதறியவாறு நிம்மதியாக ஒரு பெருமூச்சு விடுகிறார்.)

பாஸ்கரன் : என்ன வலிச்சுதா?

தலைவர் : அவன் ரொம்ப இறுக்கிப் பிடிச்சிட்டான். நல்ல

வேளை. அதிகமாக ஒண்ணும் செய்திடலே இல்லே?

பாஸ்கரன் : நான் சொன்னேனில்ல, அகிம்சாவாதின்னு. சத்தியம் பண்ணினதை மறந்திடக்கூடாது.

தலைவர் : பிடரியிலேதான் சரியான சுளுக்குப் பிடிப்பு. போய் நல்லா தேய்ச்சு சுளுக்கெடுக்கச் சொல்லணும். அதுக்கேத்த ஆளைப் பார்க்கணும். (நடப்பதுபோல் பாவித்து) இன்னொரு விஷயம். தம்பி மனசிலே வச்சிக்கிட்டாப் போதும். இவன் செத்துட்டா..

பாஸ்கரன் : இவன்?

தலைவர் : செத்துட்டா, இதிலே தப்பு ஒண்ணுமில்லே. செத்த பிறகு அவனோட தந்தத்தை நமக்கு எடுத்துக் கொடுத்திடணும். சும்மா இல்லே, விலைக்குத்தான். தந்தக்கடை முதலாளி இருக்காருல்ல, அவரு நமக்குச் சொந்தம்தான். அவருக்கு ஒரு உதவி செஞ்ச மாதிரி இருக்கட்டும். என்ன? நமக்கு அவராலே பல காரியங்கள் ஆக வேண்டியிருக்கு. தம்பிக்கும் ஒரு கமிஷன் தர்றேன். மறந்துவிடக்கூடாது. தம்பியோட விஷயம் ஞாபகத்திலே இருக்கு. அப்போ வரட்டுமா? (நடக்கிறார்.)

பாஸ்கரன் : சத்தியம் பண்ணினது மறந்துபோச்சு போலிருக்கே! (தலைவர் திரும்பிப் பார்த்துவிட்டு அசட்டுச் சிரிப்புடன் போகிறார்.)

(கேசவனைத் தடவிக் கொடுத்தபடி கனிவுடன்) உனக்கு விலை இல்லாட்டி என்ன, உன்னோட தந்தத்துக்கு விலை இருக்கு. தேவைப்படுறவங்களும் இருக்காங்க.

நீ இன்னிக்கு வெறும் பிண்டம், உதவாக்கரை, உன் உயிருக்குக் கால்காசு விலை கிடையாது. ஆனா உன்னோட தந்தத்துக்காகக் காத்துக் கிடக்கிறாங்க தந்த வியாபாரிங்க.

**உன்றன் சாவு...**
**செய்தி கேட்பதற்கோ அவசரம்**
**நீ மரித்தாலும் தோழனே.**
**சுரண்டப்பட்டாய் வாழ்ந்திருந்த காலமெல்லாம்.**
**சுரண்டல்தான் மரித்தாலும்...**

(கம்பர் 'வேர்க்கடலை, தோல்செருப்பு' என்று கூவிக்கொண்டு அரங்கத்தை அடையும்போது பாஸ்கரனின் சோகப்பாட்டு நின்றுவிடுகிறது)

கம்பர் : இது கடைசிப்பாட்டு இல்லே? அப்போ ஒத்திகை முழுவதும் நீயாகவே செய்து முடிச்சிட்டியா?

பாஸ்கரன் : எங்கே செய்றது? அதுக்கிடையிலே வேறொரு ஆள்வந்து நுழைஞ்சிட்டாரு.

கம்பர் : அரசியல் ஒரு மாதிரியா விளக்கெண்ணெய் குடிச்ச மாதிரி போய்க்கிட்டிருக்கே. என்ன ஆச்சு?

பாஸ்கரன் : கேசவன் கொஞ்சம் தடவிக் கொடுத்தான்.

கம்பர் : என்ன, தொந்திரவுபடுத்துனானா?

பாஸ்கரன் : சும்மா கொஞ்சம் கட்டிப்பிடிச்சுகிட்டான்.

கம்பர் : கெட்டிக்காரன். பாவிப்பயலை நெரித்துக்கொல்ல அவனாலேதானே முடியும்! இதையும் சாப்பிடு. (கேசவனுக்கு வேர்க்கடலை கொடுத்து வாஞ்சையுடன் தடவிக்கொடுக்கிறான்.) ஒரு பாடம் சொல்லிக் கொடுத்தியாக்கும் பிச்சைக்காரப் பயலுக்கு?

பாஸ்கரன் : இவனுக மாதிரியான ஆட்கள் பாடம் எதுவும் படிச்சுக்க மாட்டாங்க, கம்பரே. கெககம்கெட்ட பசங்க, சுயநலத்துக்காக எது வேணும்னாலும் செய்வாங்க.

கம்பர் : விக்கிரகம் எத்தனை சுமக்கிறான் வாழ்க்கைக்... கவலைகளால் பேராசையால்...

பாஸ்கரன் : சரி நாம கொஞ்சம் ஒத்திகை பார்ப்போம். இடைஞ்ச லெல்லாம் தீர்ந்துபோச்சுன்னு தோணுது. பாடற வங்களைக் கூப்பிடலாமே.

கம்பர் : அவங்க வர்றப்போ வரட்டும். நாம தொடங்குவோம். முதல்லே மனப்பாடம் பண்ணுவோம்.

பாஸ்கரன் : எங்கே நிறுத்தினோம்? ஆமாம், விக்கிரகம் சுமக்க.. (கதாகாலட்சேபம் தொடரும் தோரணையில்) சுவாமி புறப்பாட்டு ஊர்வலம் கேசவனோட பொறுப்பு. தேவர்களின், அம்மன்களின், குட்டிதேவதைகளின் ஆக எல்லோருடைய விக்கிரங்களையும் சுமக்கணும். விக்கிரகம் மட்டும் சுமந்தால் போதாது; விக்கிரகத்தைத்

தாங்கிப் பிடிக்கிறவங்களை, விக்கிரகத்துக்குக் குடை பிடிக்கிறவங்களை, வெண்சாமரம் வீசுறவங்களை எல்லாம் சுமக்கணும். விக்கிரகங்களையும் விக்கிரகம் சம்பந்தப்பட்டவங்களையும் கேசவன் மாறி மாறிச் சுமக்கிறான். விக்கிரகம் சுமக்கிறதை ஜீவனோ பாயமாக்கிக்கிட்டிருக்கிற நம்முடைய சில மாண்பு மிகுக்களைப்போல, விக்கிரகம் சுமக்கிறதனால் பாக்கியவான்களாகிவிட்ட எத்தனை எத்தனை சுமை தூக்கிகள் நம்முடைய சமுதாயத்தில் வெற்றிக்கொடி நாட்டியிருக்கிறார்கள்! இடுப்பெலும்பு எவ்வளவுக்கு வளைகிறதோ அவ்வளவுக்கு வாழ்க்கையில் வெற்றி.

*(பாஸ்கரனும் கம்பரும் சேர்ந்து ஒட்டன்துள்ளல் கூத்துப்பாணியில் ஆடிப்பாடி அபிநயம் பிடிக்கிறார்கள்.)*

**விக்கிரகங்கள் எத்தனையோ சுமக்கிறான்—வாழ்க்கை**
**கவலையால் பேராசையால் இந்த மனிதன்**
**பாக்கியம் பெற, பதவிகள் பெற,**
**வருங்கால மாப்பிள்ளைக்கு வேலை கிடைக்க,**
**அடுத்தவனுக்குக் கிடைக்க வேண்டியதைத்**
**தனது சட்டப்பைக்குள் ஒதுக்கிவைக்க**
**பற்பல விக்கிரகம் ஒவ்வொன்றாகத்**
**தலையிலேந்திச் சுமக்கிறான் மனிதன்**
**கிடைத்த அதிர்ஷ்டம் நிலைநிறுத்த,**
**தட்டிப்பறித்த பதவிகளை தக்கவைக்க,**
**கட்டிய வரனுக்குப் பதவி உயர்வு கிடைக்க,**
**அடைத்த வழிகள் திறந்துகொள்ள**
**வெவ்வேறு விக்கிரகம் ஒவ்வொன்றாக**
**ஏற்றிச் சுமக்கணும் முதுகெலும்பு ஒடியும்மட்டும்.**
**தேவர்கள் துணையிருக்க வேண்டுமெனில்**
**தேவிமார்களும் பூதகணங்களும்**
**அவர்களது ஏவலாரும் நம்மீதில்**
**பெரிதும் கருணைகாட்ட வேண்டும்.**
**அன்னாரெல்லாம் அருள்புரிய வேண்டுமெனில்**
**விக்கிரகம் இன்று சுமந்தே தீரவேண்டும்.**
**கடவுள் காப்பி குடிக்கும் நேரம்**
**தேவியிடம் பூதம் உரைக்கும்:**

"ராமன்சாரின் மகளை மணந்த
கோமன் நாயருக்கு உத்தியோக நிமித்தம்
காட்சிகள் அளவிலதாய்த் தந்திப்போது
வாரங்களாயின, கனிவுகாட்ட வேண்டும்."
கடவுளின் வழுக்கைத்தலை தடவி
தேவி உடனே அருளிச் செய்வார்:
"இனியும் வேண்டாம் தாமதம்
ராமன்சாருக்குக் கனிந்தருள வேண்டாமோ?"
"இன்ட்டர்வியூ என்றொரு சூதாட்டம் உண்டு"—
கர்வத்துடன் கடவுள் அருளிச் செய்தார்.
"இன்ட்டர்வ்யூ என்றொரு சூதாட்டம்
அதனைக் குறைத்து மதிப்பிட வேண்டாம்.
அடிமுதல் நுனிவரை ஏமாற்றுமொரு
மாமூல் என்றெல்லாம் செய்தாக வேண்டும்.
ஐந்தாறு பேர்கூடி அஞ்சாது
முழங்கிடின் முடியும் வேலை.
தகுதியுள்ளோரை ஒதுக்கிவிட்டு
சாரமற்றோரை எடுப்பதுண்டு."
தகுதிவாய்ந்தோரைக் கோமாளிகளும்
செல்வந்தரும் வல்லவரும்
வெல்லப் போட்டியிடும் நாடகமாம்
இன்ட்டர்வ்யூ என்பது கழிந்தபின்னர்
தடாலடியாரின் விக்கிரகங்களை
மடையர்கள் சுமக்க நேர்ந்தது.
காரியத்தை முடித்துக் கொள்ளக் கழுதையின்
காலையும் பிடிக்கும் மனிதனுக்குக்
கள்ளதேவதைகளின் விக்கிரகங்களைச்
சுமக்க எள்ளளவும் தயக்கமில்லை.
விக்கிரகம் எத்தனை சுமந்தான் வாழ்க்கைக்
குழப்பத்தால் பேராசையால் மனிதன்.

பாஸ்கரன் : பலர் விக்கிரகங்களைச் சுமப்பதன்மூலம் செல்வந்தர்களும் முக்கியஸ்தர்களுமாக ஆகிறார்கள். கேசவனோ எனில் மற்றவர்கள் செல்வந்தர்களாகவும் முக்கியஸ்தர்களாகவும் ஆவதற்காக தான் விக்கிரகங்களைச் சுமக்கிறான். அதுதானே கேசவனைப் போன்றவர்களின் வாழ்க்கை உத்தேசம்.

கம்பர் : வாத்யாரே, இந்த இடத்திலே இடைவேளை கொடுக்கணும்னுதானே அன்னிக்குப் பேசிக்கிட்டோம்? கதையோட நீளமட என்ன வாத்யாரே?

பாஸ்கரன் : அது பரிணாம ரகசியம்..

கம்பர் : ஆமாம், அப்படித்தான், விஷயம் உச்சத்துக்குப் போய்க்கிட்டிருக்கிறப்போ இடைவேளை.

பாஸ்கரன் : ஆமாம், இந்த இடத்திலே இடைவேளை விடுறதுதான் நல்லது. இதுக்குப் பிறகும் சரடுவிட ஆரம்பிச்சா நிறுத்தறது கஷ்டம்.

கம்பர் : அப்படீன்னா முன்னுரையை அறிவித்ததுபோல இதையும் நானே சமாளிக்கிறேன்.

பாஸ்கரன் : இங்கே ஜால்ரா, புல்லாங்குழல் இசைப் பின்னணியெலாம் எதுவும் வேண்டாம்.

கம்பர் : இல்லேல்லே. சும்மா ப்ளெய்ன். (அறிவிப்புச் செய்வது போல்) நண்பர்களே, கதை இனி நிகழ்ச்சிகள் மிக்கதும் போராட்டங்கள் நிறைந்ததுமான அடுத்த கட்டத்திற்குச் செல்வதற்கு முன்பு பத்து நிமிடங்கள் இடைவேளை.

பாஸ்கரன் : சபாஷ்! இடைவேளை.

(திரை)

# காட்சி 2

(பாஸ்கரும் கம்பரும் திரைச்சீலை இறங்குவதற்கு முன்பு நின்றிருந்த அதே இடங்களில் நின்றபடி ஒத்திகையைத் தொடர்கிறார்கள்.)

பாஸ்கரன் : (நாடகப் பிரதியைத் திருப்பிப் பார்த்துக்கொண்டு) அடுத்த பாட்டு கொஞ்சம் கிளாசிகல் ஆச்சே, கம்பரே. பக்க வாத்தியக்காரங்க?

கம்பர் : அந்த தரித்திரம் பிடிச்சவன் இங்கே நின்னுக்கிட்டிருக்கிறதைப் பார்த்திட்டு அவங்க கோயிலுக்குப் போயிட்டாங்க. இதோ, இப்போ வந்திருவாங்க. அதுவரைக்கும் நமக்கானதைப் பார்ப்போம்.

பாஸ்கரன் : சரி. அப்படீன்னா தொடங்கிடுவோம். (கதாகாலட்சேபம் செய்வது போல்) அவ்வாறாகக் கேசவன்...

(ஓய்வு பெறும் வயதை எட்டிக்கொண்டிருக்கும் கிராம அதிகாரி நுழைகிறார்.)

கி.அதிகாரி : ஏய், யானைக்கார மாவுத்தன் சங்குநாயர் என்கிறவனைத் தெரியுமா?

('போச்சு! ஒழுங்கா நடத்த விடமாட்டானுங்களே' என்று பாஸ்கரனும் கோபத்துடன் கம்பரும் திரும்பிப் பார்க்கிறார்கள்.)

மாவுத்தன் சங்குநாயரைத் தெரியுமா?

பாஸ்கரன் : என்ன வேணும்?

கி.அதிகாரி : (அதிகாரத் தொனியில்) தெரியுமான்னு கேட்டேன்.

பாஸ்கரன் : (பிரதியை மடக்கி மேடையில் வைத்துவிட்டு) அவரைத் தெரியாதவங்க இந்த இந்தியாவிலே யாரு இருக்காங்க? நீங்க யாருன்னு தெரியலீங்களே!

கி.அதிகாரி : (கர்வத்துடன்) நீங்க எந்த ஊர்க்காரங்க?

பாஸ்கரன் : மன்னிக்கணும். இந்த ஊர்க்காரங்க இல்லே.

கம்பர் : (பணிவாக இருப்பதாக நடித்து) ஐயாவைப் பார்த்தா எந்த ஊருன்னு கேட்கத் தேவையே இருக்காது போலிருக்கு. ஆப்பிரிக்காவா ஜப்பானா என்று கொஞ்சம் சந்தேகம்.

கி.அதிகாரி : (கர்வத்துடன்) இட மாற்றலாகி வந்திருக்கிற பஞ்சாயத்து ஆபீசராக்கும் நான். புரியுதா?

பாஸ்கரன் : இப்போ புரியுது. நேரிலே பாத்ததில்லையே தவிர ஐயாவோட வீரதீரப் பராக்கிரமங்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கோம்.

கம்பர் : ஐயா இங்கே வருகிறதுக்கு முன்னாலேயே உங்க புகழ் இங்கே வந்துவிட்டது. (பாஸ்கரனிடம்) முன்னாடி வேலை பார்த்துக்கிட்டிருந்த இடத்திலே இருந்த ஆட்கள் ஐயாமேலே வச்சிருந்த மதிப்பு மரியாதை யினாலே ஊர் மாற்றி வருகிறதுக்கு அங்கே இருந்த வங்க சம்மதிக்கலேன்னு கேள்வி. பிறகு போலீஸ் தலையிட்டுத்தான் விடுவிச்சாங்களாம்.

கி.அதிகாரி : இந்தா, அனாவசியமானதெல்லாம் பேசக்கூடாது! கண்ட கண்ட முட்டாப்பசங்க கிளப்பிவிட்ட கட்டுக்கதை அதெல்லாம்.

பாஸ்கரன் : பரவாயில்லே. பிரியத்தினாலேதானே அனுப்பி வைக்கச் சம்மதிக்கலேன்னு சொல்லிக்கிட்டாங்க? அது எப்படிங்க முட்டாத்தனமாகும்? அங்கே வேலை பார்த்தப்போ ஐயா செய்த சமூக சேவையைப் பற்றி அரசாங்கம் விசாரணை நடத்தணும்னு பொதுமக்கள் விரும்பிக் கேட்டது பிரியத்தினாலேதான் இல்லையா?

கி.அதிகாரி : விசாரணையா! தாராளமா வரட்டுமே!

கம்பர் : அது போகட்டும். ஒரு சவுரி முடி எடுத்துக்குங்க.

ஆபீசர் : சவுரியா?

கம்பர் : கண் மை, காமசூத்திரம்—எதுவேணும்னாலும் எடுத்துக்குங்க.

கி.அதிகாரி : மாவுத்தன் எங்கே இருக்கான்னு தெரியுமா? ஒரு புகார் இருக்கு.

பாஸ்கரன் : யானைக்கு உடம்பு சரியில்லேங்கிறதனாலே திருவாளர் சங்குநாயர் தடிமரத்தைத் தூக்கப் போயிருக்காரு.

கி.அதிகாரி : நோய் மோசமாக இருக்கு, அப்படித்தானே? சங்கு நாயரைக் கொஞ்சம் கூப்பிட முடியுமா?

பாஸ்கரன் : வரமாட்டாரு அப்படி ரொம்ப அவசரம்னா அந்த முக்கிலிருக்கிற கள்ளுக்கடைக்குப் போனால் பார்க்கலாம்.

கம்பர் : அதிர்ஷ்டக் குறி தெரியுது. லாட்டரிச் சீட்டு ஒண்ணு எடுத்துக்கிறீங்களா? பஞ்சாப் ஒரு லட்சம், உ.பி. ரெண்டு லட்சம், குஜராத் ஒண்ணரை, தமிழ்நாடு மூணு, கேரளா அஞ்சு. வெறும் ஒரு ரூபா கொடுத்து வாங்கினால் அதிர்ஷ்ட லட்சுமியோட கடாட்சத்தினாலே... (கிண்டல் பண்ணும் பாவனையில் அடி முதல் முடிவரை பார்த்தபடி) அப்புறம்... இந்த மோகன தேகத்திலே பூசிக்கிறதுக்கு...

கி.அதிகாரி : புண்ணியவான்களே வழிமறிக்காதீங்க. அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்.

கம்பர் : கேட்டீரா வாத்யாரே, ஐயாவுக்கு மோகன தேகம் வேண்டாமாம். அப்படீன்னா கம்பராமாயணம் ஒண்ணு வாங்கிக்குங்க.

பாஸ்கரன் : கம்பரே, போய் அந்த சங்குமாமாவை இங்கே கூட்டிக் கிட்டு வாரும்.

கம்பர் : மாண்புமிகுக்களெல்லாரும் கொடியேத்தத்துக்கு அன்பளிப்பு தருவாங்க. சார் மாண்புமிகுவா இல்லையான்னு தெரியாதில்லே? (பக்கத் திரைச்சீலைக்கு அருகாகப் போய்நின்று) சங்குமாமா... சங்கு மாமா!

சங்குநாயர் : (தொலைவிலிருந்து) "யாருடா அங்கே?"

கம்பர் : சங்குமாமாவைக் கொஞ்சம் பாக்கணுமாம். கொஞ்சம் வேகமா வா.

சங்குநாயர் : "குஞ்சியம்மாவா?"

கம்பர் : இல்லே, மாண்புமிகு.

சங்குநாயர் : "யாரு?"

கம்பர் : மிஸ்டர் மாண்புமிகு. என்னையும் சேர்த்து இங்கே மூன்று மாண்புமிகுக்கள். (பாஸ்கரனிடம்) வாத்தி யாரையும் சேர்த்திட்டேன் பார்த்தீங்களா. நம்ம ரெண்டுபேர் கூட்டத்திலே. (திடீரென்று தொலைவில் பார்த்த யாரையோ வளைத்துப்போடும் முயற்சியில் விளம்பர வாசகத்தை முழக்கிக்கொண்டு ஓடிப் போகிறான்.)

பாஸ்கரன் : சங்குநாயரைப் பற்றிய புகார் என்னவென்று சொல்லலியே.

கி.அதிகாரி: கேசவனைப் பற்றித்தான் புகார்.

பாஸ்கரன் : சமீப காலத்திலே கேசவன் யாருக்கும் உதவி செஞ்ச தில்லையே. அப்படியிருக்க புகார் செய்தது யாரு?

கி.அதிகாரி: புகார் சமீப காலத்தியது இல்லே.

பாஸ்கரன் : அப்படீன்னா சரியாயிருக்கும். நல்லா இருந்த காலத்திலே கேசவன் மூலமாகப் பயனடைந்த யாராவது புகார் செஞ்சிருப்பாங்க.

கி.அதிகாரி: பத்திரிகைச் செய்தியைப் பார்த்த பிறகு இனிமே ரொம்பத் தாமதப்படுத்தக்கூடாதுன்னு தோணுதில்ல?

பாஸ்கரன் : இனியும் ரொம்பத் தாமதப்படுத்தாம இருக்கிறதுதான் நல்லது.

கி.அதிகாரி: நீங்க யாருன்னு தெரியலையே?

பாஸ்கரன் : நான் இந்தப் பஞ்சாயத்திலேதான் இருக்கேன். கேசவனோட ஃபிரண்டு. ரெண்டு பேருக்கும் குறிப் பிட்ட தொழில் எதுவும் இல்லாததாலே காமன் இன்ட்ரெஸ்ட் பலதும் இருக்கு.

("யாருடா என்னைப் பார்க்கணும்? நல்லாப் பார்த்துக்கோ, இதோ நான் வந்திட்டேன்" என்று கூறியவாறே சங்குநாயர் வருகிறான்.) இதுதான் சங்குமாமா மாவுத்தன். இவர் பஞ்சாயத்து ஆபீசர். ஒரு புகாரை விசாரிக்க வந்திருக்காரு.

சங்கு. : (திகைப்படைந்து) புகாரா? அந்தக் கள்ளுக்கடை மத்தாயி பற்ற வைத்ததாக இருக்கும். சுத்தப் பொய், சார். வெறும் புளுகு. நான் மனசறிஞ்சு எதுவும் செய் யலே. (பணிந்து கெஞ்சும் பாவனையில் நிற்கிறான்.)

பாஸ்கரன் : சங்குமாமா மேலே புகார் இல்லே, கேசவன் மேலேயாக்கும்.

சங்குநாயர் : (தைரியம் மேலிட நெளிந்து நடந்தபடி) அப்படிச் சொல்லு. என்மேலே புகார் கொடுக்கிறதுக்கு நெஞ்சுர முள்ளவன் எவன் இருக்கான் இந்த இந்திய மகா சாம்ராஜ்யத்திலே? எல்லார் கதையையும் நான் நடுத்தெருவுக்குக் கொண்டு வந்திருவேன்.

பாஸ்கரன் : அதாவது, கேசவன் பேரிலான புகார்...

சங்குநாயர் : அவன் பேரிலே புகார்தானே, தண்டனையே கொடுக்க வேண்டியதுதான். அகம்பாவம் பிடிச்சவன்!

கி.அதிகாரி : (ஒரு பைலைத் திறந்து) கொச்சாம்பள்ளி மனய்க்கல் ருத்ரநாராயண நம்பூதிரியாக்கும் புகார் கொடுத் திருப்பவர்.

சங்குநாயர் : யாரு?

கி.அதிகாரி : கொச்சாம்பள்ளி மனய்க்கல் ருத்ரநாராயணன்.

(சங்குநாயர் உரக்கச் சிரிக்கிறான்)

என்ன?

சங்குநாயர் : (சிரிப்பை நிறுத்தி) இது யாரோ திருட்டுப்பயல் அனுப்பிச்சதா இருக்கும். அந்த மகானுபாவரு செத்துப் போய் எத்தனை வருசமாச்சு!

கி.அதிகாரி : எத்தனை வருசமாச்சு?

சங்குநாயர் : கோயில்லே திருவிளக்கு பூசை நடந்த வருசம் செத்தாரு. எத்தனை வருசம் ஆச்சுடா, பாசுகரா?

பாஸ்கரன் : நான் பொறக்குறதுக்கு ஒரு வருசத்துக்கு முன்னே மகாதிருவிளக்கு பூசை நடந்துன்னு கேள்விப்பட் டிருக்கேன். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து ஏழிலே நடந்தது.

கி.அதிகாரி : ஆமாம். சரிதான், நாற்பத்தியேழில்தான் புகார் கொடுத்தது. நாற்பத்தியேழு ஆகஸ்டில்.

பாஸ்கரன் : முப்பது வருசமாயிடிச்சில்ல? அப்போ புகாருக்குச் சொந்தக்காரன் இப்போ ஒரு பேயோ பிசாசோதான்.

சங்குநாயர் : அன்னிக்குக் கொடுத்த புகாரை விசாரிக்க இன்னிக்கு இந்தப் பக்கம் வந்தீங்களாக்கும்? நீங்க அப்படி

ஒண்ணும் மோசமில்லே!

கி.அதிகாரி: இது பல டிபார்ட்மென்ட் சம்பந்தப்பட்ட விஷயம். அப்படி சட்டுன்னு தீர்த்து முடிக்க முடியுமா? இங்கே இருக்கிறது முழுக்க இந்தப் புகார் சம்பந்தப்பட்ட பேப்பருங்கதான்.

பாஸ்கரன் : யானைக்கார மாவுத்தனுக்கு என்ன சார் தெரியும் அரசாங்க விஷயமெல்லாம்? இப்போ நீங்க புறப்பட்டு வந்திருக்கிறதே கொஞ்சம் சீக்கிரம்தான். தன்னுடைய பிரியப்பட்ட 'குமாரி புகார்' அரசாங்கத்தோட பராமரிப்பை ஏற்று வளர்ந்து இளமைப் பருவத்தை அடைந்ததைக் காண்கிற பாக்கியம் இல்லாமல் போய்விட்டது. பாவம், ருத்ரநாராயண நம்பூதிரிப் பாடுக்கு! ஒரு வேண்டுகோள் சார்! இப்போதைக்கு இதை முடித்து விடாதீங்க. இது 'திருமதி புகார்' அம்மையார் ஆகி, மணிவிழாவும் நூற்றாண்டுவிழாவும் கொண்டாடி முடித்த பிறகு இறைவனடி சேரட்டும்.

சங்குநாயர்: நம்பூதிரிப்பாடின் புகார் என்னவென்று கேளுடா கிறுக்கா. அவருக்கு ஊர்வலக் கூலி கிடைத்தது போதாமல் இருந்திருக்கும்.

கி.அதிகாரி: புகார்... (பைலைப் புரட்டுகிறார்) புகார் இதோ இது தான். (வாசிக்கிறார்) சில வருஷங்களாக இவன் மரியாதைக்குரிய நாட்டாமைக்காரரோடும் மாவுத்த னோடும் அனுசரணையாக இல்லாமலும், அவர் களுடைய அதிகாரத்தைத் தட்டிக் கேட்கும் விதத்திலும் நடவடிக்கைகளில் ஈடுபடுவதும், நேற்று இரவில் தெய்வ விக்கிரகத்தை மனப்பூர்வமாகவும் கெட்ட நோக்கத்துடனும் தலையிலிருந்து இரண்டு தடவை கீழே தூக்கி எறிந்துவிட்டுத் தன்னுடைய எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில் தலை நிமிர்த்திக் கொண்டிருந்ததும் கண்டிக்கத் தக்கதாகும். அதிகாரத் தைக் கேள்வி கேட்கிறதுக்கும், யாருக்கும் அடங்காமல் இருக்கிறதுக்கும் யானையை அனுமதிக்கிறது என்பது சட்டதிட்டங்களுக்கு எதிரான அச்சுறுத்தல் என்பதாலும் பொதுப் பாதுகாப்பை முன்னிறுத்தியும் ஆயுதம் ஏந்திய இரண்டு போலீஸ்காரர்களை அவனுடைய நடத்தை நன்றாக ஆகும்வரை

தொடர்ந்து மேற்பார்வையிட்டுச் சட்ட திட்டத்தைப் பராமரிக்க அவசரமாக வேண்டிக் கொள்ளப்படுகிறது.

பாஸ்கரன் : அப்போ போலீஸ்காரர்களுடைய நடத்தை நன்றாக இருக்க யாரை மேற்பார்வைக்கு வைப்பது?

சங்குநாயர் : எதுவும் பேசாதடா. அந்தக் கள்ளுக்கடையிலே இருந்து அவுங்க எதையாவது கேட்டால் பின்னால் கதை முடிந்தது.

கி.அதிகாரி : ருத்ரநாராயண நம்பூதிரிப்பாடின் வாரிசுகள் யாராவது இப்போ உயிரோட இருப்பாங்களில்லே?

சங்குநாயர் : வாரிசுகள் நிறையப் பேரு இருப்பாங்க. ஆனால் பங்கு போட்டுக்கிறதுக்கு ஏதாச்சும் இருக்கணுமில்ல? என்னப்பா பாசுக்கரா?

பாஸ்கரன் : ஜமீன்தார் வரி, பிரிவி பர்ஸ், கப்பம், குத்தகை ஆக இதெல்லாம்தான் பங்குச் சொத்து. ஆனால் கொடுக்கிறதுக்குத்தான் யாருமில்லே.

சங்குநாயர் : புகார் மனு கிடைச்ச பிறகும் போலீஸ்காரங்களைக் கூப்பிடாம இருக்கிறது ஏன்? திருமேனி சும்மா ஒண்ணும் சொல்லிடலே. அவர் வீம்பு பிடிச்ச ஆளாக்கும்.

கி.அதிகாரி : அப்படியெல்லாம் போலீஸ்காரங்களை அமர்த்திட முடியுமா? அது அனுமதிக்கத் தக்கதுதானா என்று உள்துறைக்கு எழுதிக்கேட்டோம. எஃப்.ஆர்-இலும் எஸ்.ஆர்.-இலும் இதைப் பத்தி எதுவும் சொல்லப்பட வில்லை என்பதாலும், முன்னிகழ்வுகள் இல்லாததாலும் உள்துறை, வனத்துறையின் அபிப்பிராயத்துக்காக அனுப்பி வைத்திருக்கிறது. வனத்துறையின் பதில் இதோ இந்தா இருக்கு. (பைல் பிரித்து முணு முணுத்தபடி படிக்கிறார்) வனத்துறை நடைமுறைச் சட்டம் 5ஆம் பிரிவு 7ஆம் உட்பிரிவின்படி யானையைக் குழியில் விழச் செய்வதும், 18ஆம் பிரிவின் படியும் 20ஆம் பிரிவின்படியும் பழக்கப்பட்ட யானைகளின் ஒத்தாசையுடன் உயரே தூக்கித் தேவையான கட்டுகள் கட்டி காட்டிலிருந்து இறக்குமதி செய்ததும், 54ஆம் பிரிவு 37ஆம் உட்பிரிவில் கூறப்பட்டுள்ள நிபந்தனைகளுக்கு ஏற்ப மூன்று

நாட்கள் அடுத்தடுத்து விளம்பரம் செய்து, 420ஆம் உட்பிரிவும் 620ஆம் உட்பிரிவும் சேர்த்து வாசிக்கும் போது உண்டாகும் அர்த்தத்திற்கு மாறுபடாதபடி வெளிப்படையாக விளம்பரப்படுத்தி ஏலமிட்டு ஸ்திரப்படுத்தி ஏலத்திற்குள்ளதான செலுத்துச் சீட்டைக் கருவூலத்தில் கட்டி ரசீது வாங்கிக் கொண்டும், யானையை ஏலம் எடுத்தவருக்கு 419ஆம் பிரிவு 210ஆம் உட்பிரிவின்படி யானையை ஒப்படைப் பதும், பின்னர் அது சம்பந்தமான பாத்தியதை குறித்து இந்தப் பிரிவில் எதுவும் சொல்லப்படாத காரணத் தால் உள்துறை இந்தப் புகார் சம்பந்தமான நடவடிக் கையை நேரடியாக எடுப்பது, அல்லாத பட்சத்தில் இப்போதுள்ள நடைமுறைச் சட்டதிட்டங்களிலுள்ள முரண்பாடுகளைக் களைவதற்காக ஒரு விசாரணைக் குழுவை நியமிப்பது என்பதைச் செயற்படுத்த வேண்டும்.

பாஸ்கரன் : அர்த்தம் புரியலையே.

கி.அதிகாரி : தமிழிலே சொன்னாக்கூடப் புரியலையா? காட்டிலே பிடிச்ச யானையை வித்து முடிச்சுட்டா அதுக்குப் பிறகு வனத்துறைக்கு எந்தப் பொறுப்பும் கிடையாது என்கிறதுதான் நான் சொன்னதோட சுருக்கம்.

பாஸ்கரன் : இதைச் சொல்லத்தானா இப்படி ஊரை வளைச்சுப் பேசினீங்க?

சங்குநாயர் : அப்படீன்னா அதுக்குப் பிறகு பொறுப்பு யாருக்கு?

கி.அதிகாரி : (மற்றொரு பைலைப் பிரித்துக்கொண்டு) பொறுப்பு யாருக்குன்னு தீர்மானிக்கிறதுக்குத்தானே இந்தக் கடிதப் போக்குவரத்துகள். வனத்துறையிலிருந்து திரும்பி வந்த புகார் உள்துறையிலிருந்து தேவஸ்தானத் திற்கு அனுப்பி வைக்கப்பட்டது. தேவஸ்தானம்... தேவஸ்தானம்... இதோ தேவஸ்தானத்தினுடைய பதில்... (வாசிக்கிறார்) அறநிலையத்துறை நடைமுறைச் சட்டம் 132ஆம் பிரிவு 122ஆம் உட்பிரிவில் பிரஸ் தாபிக்கப்பட்டிருப்பது போல அறநிலையத்துறை வகையிலோ, அறநிலையத்துறைக்குக் காலாகாலத்து சட்ட பிரகாரம் எடுத்தவையோ ஆன கோயில்களில் வேலைகளுக்கு மேல்சாந்தி, கீழ்சாந்தி, சுபகாரியம்,

எடுபிடி வேலை, கொட்டுப் பாட்டு, நாதஸ்வரம், கூட்டிப்பெருக்குதல், பாத்திரம் தேய்ப்பு, யானையைக் கட்டிப்போடுவது என்பதான வேலைகளுக்கு 122ஆம் பிரிவில் விவரிக்கப்பட்டிருக்கும் இனத்தில் உள்ளதும், உற்சவம் மற்றும் பிரத்தியேக விசேஷ தினங்கள் என்பவற்றிற்காகத் தற்காலிகமாகவும் அதாவது காலக் கெடு நிச்சயித்தும், ஒப்பந்தப் பத்திரத்தில் கையெழுத் திட்டோ வாய்வார்த்தையால் சம்மதித்தோ நியமிக்கப் படும் வேலைகளுக்கு மட்டுமல்லாமல் நியமனம் செய்ய இயலாததும், அவர்களுடைய போக்கு திருப்தி கரமாக இல்லாத பட்சம் தண்டனை நடவடிக்கை எடுக்கவோ வேலையிலிருந்து நீக்கித் திருப்பி அனுப்பவோ செய்ய முடியும் என்றபோதிலும் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள தொழிலாளர்களின் குழுக்களில் யானை, கோயில்காளை முதலியன இடம்பெறாதிருப்பதால் ஒருவேளை ஒன்றாம் பிரிவை முரண்படுத்தி யானை, காளை முதலியவற்றை மேல்சாந்தி, கீழ்சாந்தி முதலிய தொழிலாளர் பட்டியலில் சேர்க்கவோ, தவிர்க்க இயலாத நிலையில் யானை மீது எடுக்க வேண்டிய நடவடிக்கையை மாவுத்தன் மீதும், காளையின்மீது எடுக்க வேண்டிய நடவடிக்கையைக் காளைக்குரியவர் மீதும் சாட்டி யானைக்கும் காளைக்கும் பதிலாக அவர்களைப் பொறுப்பாக்கி உள்துறை தேவஸ்தான வாரியத்தை பொறுப்பாக்காத பட்சம் பிரிவு 14, உட்பிரிவு 7, 8, 9 ஆகியவற்றின் அடிப்படையிலோ, உட்பிரிவு 10, 11, 12 ஆகியவற்றின் அடிப்படையிலோ மேல்நடவடிக்கை...

பாஸ்கரன் : இனி கொஞ்ச நேரம் ஓய்வு எடுத்த பிறகு வாசிச்சுக் காட்டுங்க, போதும். பெருமூச்சு கொஞ்சம் அடங்கட்டும்.

சங்குநாயர் : கோயில் நாதஸ்வரக்காரரைக் கூப்பிட்டு வாசிக்கச் சொல்லுங்க. அவராவது மூச்சுப் பிடிச்சு வாசிப்பாரு

பாஸ்கரன் : நல்லா ஆனந்தபைரவி ராகத்திலே ஒரு பிடி பிடிக்கிற துக்கு சரியான சாகித்தியம். ராகம் எதுவானாலும் விஷயம் எதுவும் புரியப்போறதில்லே.

கி.அதிகாரி : இது கதையோ நாடகமோ இல்லே, வாசிச்சு ரசிக்க.

பாஸ்கரன் : கதை நாடகமெல்லாம் பாமரர்களுக்கு. இது பெரிய வேதம் இல்லையா? யாரும் படிக்கவோ, படிச்சதைப் புரிஞ்சிக்கவோ, புரிஞ்சிக்கிட்டதுக்கு அர்த்தம் இது தான்னு நிச்சயிக்க முடியாமப்போறதும்...

கி.அதிகாரி: உங்களுக்கு என்ன புரிஞ்சுதுன்னு சொல்லுங்க பார்ப்போம்.

சங்குநாயர்: டேய் மண்டு, நமக்கெல்லாம் புரியற பாஷையிலே எழுதினா பெறகு இவங்களைப் போல உள்ளவங் களுக்கு என்னடா வேலை? எல்லாருக்கும் சட்டம் புரியுமென்றால் பிறகு இதுங்களோட அவசியம் என்ன? புரிஞ்சிடுச்சு சார், இந்தளவுக்குப் புரிஞ்சாப் போதும்.

பாஸ்கரன் : போதுமா?

சங்குநாயர்: தாராளமாப் போதும்.

பாஸ்கரன் : தாராளம்! விக்கிரகத்தை உடைச்சதுக்கு யானைக்கு பதிலா மாவுத்தன் மேலே நடவடிக்கை எடுத்து தண்டனை கொடுக்கணும்னு எழுதியிருக்கு.

சங்குநாயர்: (திகைத்து) என்மேலே நடவடிக்கை எடுப்பாங்களா? நான் எதுவும் செய்யலையே, சார்.

கி.அதிகாரி: உங்க மேலே நடவடிக்கை எடுக்கணுமா வேண்டா மான்னு தீர்மானிக்கும்படியாத்தான் எழுதியிருக்கு.

பாஸ்கரன் : பாமரர் பாஷையிலே சொன்னால் சாரை சமாளிச்சு சரிபண்ணிக்கிட்டால் நடவடிக்கை இல்லாமப் பண்ணிடுவார்னு அர்த்தம்.

கி.அதிகாரி: (ஒரு புன்னகையுடன்) ஆமாம், அதையெல்லாம் என்னாலே சரிபண்ண முடியும்! சரி, இந்த பைல் சமூகநலத்துறை, குடும்பநலத்துறை, கல்வித்துறை, தொழில்துறை இப்படி எங்கெல்லாமோ போய்... கடைசியில் காபினெட் சட்டமன்ற சட்டத்தை அனுசரித்து பஞ்சாயத்தின் அபிப்பிராயத்துக்காக வந்திருக்கிறது. அப்போதுதான் நம்பிக்கையில்லாத் தீர்மானமும் கோர்ட் கேசுமாகச் சேர்ந்து பஞ்சாயத்து நடவடிக்கைகள் ஸ்தம்பிச்சிப் போயிடுச்சு. பஞ்சாயத்து ஆபீசர்தான் விவரம் கேட்டு விசாரித்து ரிப்போர்ட்

தரச்சொல்லி ஆர்டர் போட்டிருக்கிறாங்க. (அனாயாச மாக) என்னோட ரிப்போர்ட் அடிப்படையிலேதான் இனி கவர்ன்மெண்ட் முடிவெடுக்கும்.

பாஸ்கரன் : உடனே கொஞ்ச போலீஸ்காரங்களைக் காவலுக்கு சிபாரிசு செய்யணும், சார். இவன் எங்கேயாச்சும் செத்துத் தொலைச்சிட்டான்னா சட்டப் பிரிவுகளும் உட்பிரிவுகளும் சேர்த்துப் பிடிச்சாலும் தூக்கி நிறுத்த முடியாது. (கேசவனிடம்) உனக்கு அதிர்ஷ்டம் இருந்தால் சகல விதமான போலீஸ் மரியாதைகளுடன் உன்னோட சவ ஊர்வலமும் மற்ற சடங்குகளும் நடக்கும்! அதிர்ஷ்டம் வந்தா இப்படித்தான் வரணும்!

கி.அதிகாரி: இவனோட இப்போதைய நிலைமையில் போலீஸ் காரங்களைக் காவலுக்குப் போட்டால் 'சாவை எதிர்நோக்கும் யானைக்குப் போலீஸ் காவல்' அப்படி இப்படீன்னு எழுதி எல்லாப் பத்திரிகைக்காரங்களும் குழப்பம் உண்டாக்குவாங்க. பிறகு அதுக்கு பதில் சொல்ல நடையா நடக்கணும்.

பாஸ்கரன் : காவல் போடாம இருந்தால் இடையிலே அவன் ரொம்பவும் அட்டூழியம் பண்ணினால்?

கி.அதிகாரி: ஏன் காவல் போடலேன்னு அப்போ கேள்வி வரும். ரெண்டு வழியிலும் நமக்குத் தலைவலிதான். ஆனால் அது என்கிட்ட நடக்காது. முதுமை, வியாதிகளால் பீடிக்கப்பட்டுள்ளதால் போலீஸ் காவல் தேவை இல்லை. ஆனாலும் அத்து மீறுகிற சக்தி எப்போ வருமென்று நிச்சயிக்க முடியாததால் போலீஸ் உதவி எப்போ வேண்டுமானாலும் தேவைப்படலாமென்று எழுதி அனுப்பிச்சிடுவேன்.

பாஸ்கரன் : அப்போ போலீஸ் வேணுமா, வேண்டாமா?

கி.அதிகாரி: வேணும்னா வேணும். வேண்டம்னா வேண்டாம். மேலதிகாரிகள் அவர்கள் விருப்பம்போலச் செய்ய லாம். நம்ம கம்பிலே தட்டக்கூடாது.

பாஸ்கரன் : பேஷ்! ஐயாவை அரசு ஊழியர்களோட குலகுருவாக ஆக்கணும். நிர்குணமுடையவர், நிராமயர், பற்றற்றவர்.

கி.அதிகாரி: ரெஸ்பான்சிபிலிட்டி எடுத்தால் தொலைஞ்சோம்.

பாஸ்கரன் : ரெஸ்பான்சிபிலிட்டி எடுக்காம இருந்தா பதவி உயர்வு. அப்படித்தான் இந்த சம்பளம் வாங்குறீங்களோ?

கி.அதிகாரி : அதிகமா சம்பளம் வாங்குறவங்க சொல்றதைச் செய்ய வேண்டியது. இப்படிச் செய்யின்னு சொன்னா இப்படிச் செய்ய வேண்டியது. அப்படிச் செய்யின்னு சொன்னா அப்படிச் செய்ய வேண்டியது. ஒண்ணும் சொல்லலேன்னா எதிலேயும் பட்டுக்காம ஒதுங்கி நிக்க வேண்டியது. எல்லாரும் இதைத்தான் செஞ்சிக்கிட்டிருக்காங்க.

சங்குநாயர் : என் சம்பளத்தைக் கூட்டித் தரச்சொல்லி ஒரு கோரிக்கை மனு கொடுத்து இருபத்தைஞ்சி வருசமாச்சு. அது விசயமா ஏதாச்சும்...?

கி.அதிகாரி : விசாரணைக்கு வரும். அப்போ ஒரு தடவை ஞாபகப் படுத்தணும்.

பாஸ்கரன் : கோரிக்கை வனத்துறை வழியா எக்சைஸ் டிபார்ட்மெண்ட்டுக்குப் போய், குடும்பநலத்துறைக்குப் போய், பொதுத்துறைக்குப்போய் வரணுமில்ல? எல்லாமாச் சேர்ந்து கொஞ்சம் தாமதமாகும்.

சங்குநாயர் : சம்பளமாச்சே, இருபத்தஞ்சு வருசம்.

பாஸ்கரன் : கேசவனுக்கு ஏதாச்சும் உண்டா?

சங்குநாயர் : எனக்கே இல்லே, அவனுக்கு எப்படி!

கி.அதிகாரி : சரிப்படுத்திரலாம். விசாரணைக்கு வர்றப்போ ஒரு தடவை என்னை வந்து பார்க்கணும். (பைல்களை அடுக்கிக்கொண்டு) இந்தக் கேசிலே உங்க மேலே நடவடிக்கை எடுக்கணுமா வேண்டாமா என்கிறதுக்கு நான் ரிப்போர்ட் அனுப்புறதா இருக்கேன்.

சங்குநாயர் : என்னைக் காப்பாத்தணும்.

பாஸ்கரன் : பாவமா இருக்கு. சம்பள பாக்கி கிடைச்சதும் வீட்டிலே வந்து பார்ப்பாரு.

கி.அதிகாரி : வந்து பார்க்கிறேன்னு சொல்லுவாங்க. காரியம் முடிஞ்சிருச்சுன்னா ஆளைக் கண்டுக்கிறதில்லே. எத்தனை பேரைப் பார்த்திருக்கேன் இந்த மாதிரி!

(போகும் வழியில் நின்றபடி தலைவர் கூப்பிடுகிறார்: "மிஸ்டர் பாஸ்கரன், மிஸ்டர் பாஸ்கரன்!")

பாஸ்கரன் : யாரு? (அந்தத் திசை நோக்கித் திரும்பிப் பார்க்கிறான்) ஓ, திரும்பி வந்தாச்சா? என்ன வேணும்?

தலைவர் : "நம்முடைய மெகபோனை எடுத்துக்கொள்ள மறந்து போச்சு."

சங்குநாயர் : யாருப்பா அது?

பாஸ்கரன் : நம்ம தலைவரு. (கூப்பிடு குரலில்) மெகபோன் இங்கே தான் இருக்கு. வந்து எடுத்துக்கிட்டுப்போங்க.

தலைவர் : "கொஞ்சம் எடுத்து வந்து இங்கே கொடுத்துவிட்டுச் செல்லவேண்டும்."

கி.அதிகாரி : (எட்டிப்பார்த்து) இந்தா, அவரை இங்கே கொஞ்சம் கூப்பிடு. பார்க்கணுமின்னு நெனச்சேன்.

பாஸ்கரன் : (கூப்பிட்டுக் கூறுகிறான்) இங்கே வாங்க. நம்ம வில்லேஜ் ஆபிசர் கூப்பிடுறாரு.

தலைவர் : "ஓ, அங்கே இருக்கிறாரா? அங்கே மாவுத்தனும் இருக்கிறாரா?"

பாஸ்கரன் : இருக்காங்க.

சங்குநாயர் : என்னைப் பார்த்து அவருக்கு என்ன ஆகணும்?

பாஸ்கரன் : தோழமை உணர்வோட விசாரிச்சிருப்பாரு.

சங்குநாயர் : தோழமை! என்னோட சம்பள பாக்கியை வாங்கித் தர்றதாகச் சொன்னாரு... எனக்காக யாருகிட்டயும் எதுவும் சொல்ல வேண்டாம்.

(தலைவர் நுழைகிறார். பயந்து பயந்துதான் வருகிறார். முகம் முழுவதும் சிரிப்பை வரவழைத்துக்கொண்டு கிராம அதிகாரிக்கு வணக்கம் சொல்கிறார்.)

தலைவர் : நான் ஆபீசுக்கு வரலாமென்று நினைத்திருந்தேன். இதை முடித்துவிட்டு வரலாமென்று எண்ணம். என்னாயிற்று சங்குநாயர்? எல்லாவற்றையும் சரி செய்கிறேன்.

கி.அதிகாரி : நம்ம விஷயம் என்னாச்சு?

தலைவர் : எது? விசாரணையைப் பற்றியா? அதொன்றும் ஆகாது.

கி.அதிகாரி : அதில்லே, இன்னொரு விஷயம். பஞ்சாயத்து ரோடு சம்பந்தப்பட்டது.

தலைவர் : ஓ, அதை முடித்துவிட்டேன். (கிராமஅதிகாரியை தனியே அழைத்துப்போய் ரகசியமாகப் பேசுகிறார். இடையிடையே மிடுக்குடன் சிரித்தவாறும் அடி முதல் முடிவரை பாவனைகள் செய்துகொண்டும் பேசும் ரகசியப் பேச்சிலிருந்து ஏதோ சதியாலோசனை என்று தோன்றுகிறது.)

(பாஸ்கரன் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்து விட்டு யானையின் தும்பிக்கையைத் தடவிக் கொடுத்த படி பாடுகிறான்.)

**"பூசாரிகள் கூட்டம் அனுபவிக்கிறது, கூட்டமாய்க்**
**கோயில்காரர்கள் அனுபவிக்கிறார்கள்.**
**பூசாரியும் கோயில்காரர்களும் சேர்ந்துவிட்டால்**
**என்ன மிஞ்சும் கடவுளுக்கு நைவேத்தியம்?"**

(சங்குநாயர் இடுப்பிலிருந்த கத்தியை எடுத்துக் கல்லில் தேய்த்துக் கூர்மைப்படுத்துகிறான். தலைவருக்கும் கிராமஅதிகாரிக்கும் இடையிலான உரையாடல் சப்தம் கொஞ்சம் கொஞ்சமாக உச்சத்திற்கு வருகிறது)

சொன்னாப்பிலே, பணக்காரங்களுக்கு இதிலே சந்தோஷம்தான்.

கி.அதிகாரி : ஆனால் பணக்காரங்க மட்டும் சந்தோஷப்பட்டால் பேதாதில்லே. தூக்கத்திலே அவங்க காலை மிதித்து நமக்கென்ன ஆதாயம்?

தலைவர் : செய்வீங்கன்னு தெரியும். சாயங்காலம் பார்க்கிறப்போ ரெடி. நான் வர்றேன்.

பாஸ்கரன் : ஆகட்டும் சார். ரோடு வேலை கான்ட்ராக்ட் கூட்டுறவுச் சங்கத்துக்கு தராமல் அந்தத் திருட்டு முதலாளிக்குக் கொடுக்கப் போகிறதாகக் கேள்விப் பட்டேனே.

கி.அதிகாரி : இதுக்கு முன்னாலே கொடுத்த வேலையே சங்கத்துக் காரர்கள் இன்னும் முடிச்ச பாடில்லே. பின்னே எப்படி?

பாஸ்கரன் : சங்கத்துக்காரங்களுக்கு அதுக்கு முன்னாடி செஞ்ச வேலைக்கான காசு கிடைக்கலே. சங்கம் என்கிறது கறுப்புச்சந்தை இல்லையில்லே, இஷ்டம் போலப் பணத்தை முடக்குறதுக்கு.

கி.அதிகாரி : எடுத்துக்கிட்ட வேலையை முடிக்காம இன்னும் இன்னும் காண்ட்ராக்ட் வேணும்னு கேட்டா? அது சரியில்லே!

பாஸ்கரன் : ஓகோ, இப்போ வாதி, பிரதிவாதி ஆயிட்டாராக்கும்? ஆமா, நீங்கதானே சங்கச் செயலாளர்?

சங்குநாயர் : கேளு, நல்லாக்கேளு.

தலைவர் : திட்டப்படி வேலை நடக்கிறதில்லேன்னு தெரிஞ்சதும் நான் ராஜினாமா செய்திட்டேன்.

பாஸ்கரன் : நீங்க போட்ட திட்டப்படி வேலை நடக்கலேன்னு தானே?

சங்குநாயர் : நீங்க நெனச்சதை சாதிக்கிறதுக்காக சங்கத்தை உடைக்கப்பார்த்தீங்க. கிடைச்சதை ஏப்பம் விட்டாச்சு.

தலைவர் : நிலைமை தெரியாமல் அத்துமீறிப்பேசக்கூடாது, சொல்லிட்டேன்.

சங்குநாயர் : நிலைமை! அப்படீன்னா நீங்க கட்டிக்கிட்டிருக்கிற பங்களாவோட ரெண்டாம் மாடி நிலைப்படியிலே ஏறி நின்னுக்கிட்டுப் பேசலாமா. நிலைமையாம் நிலைமை!

கி.அதிகாரி : நீங்கெல்லாம் தப்பாப் புரிஞ்சிக்கிட்டிருக்கீங்க. கூட்டுறவுச் சங்கங்கள் இங்கே மட்டுமில்லே, எல்லா இடத்திலேயும் இப்படித்தான். உயிர் ஊசலாடிக்கிட்டு இருக்கு.

பாஸ்கரன் : எல்லா இடத்திலேயுமில்லே. இது மாதிரியான சங்கம் விழுங்கிகளும் அவங்களோட கையாளுகளும் இருக்கிற இடங்களிலெல்லாம்தான்.

தலைவர் : சார், இப்போ போகப் போறீங்களா, இல்லே தாமதமாகுமா?

கி.அதிகாரி : கொஞ்சம் இருந்திட்டு வரணும். சாயங்காலம் பார்க்க லாம். போனவாரம் சொன்ன மாதிரி ஆயிடக்கூடாது.

தலைவர் : அதை இங்கே கொஞ்சம் எடுத்துக்கொடுங்க. (மெக போனைச் சுட்டிக்காண்பிக்கிறார்.)

பாஸ்கரன் : வந்து எடுத்துக்குங்க.

தலைவர் : கொஞ்சம் நீயே எடுத்துக்கொடுத்திடுப்பா, ப்ளீஸ்.

(பாஸ்கரன் மெக போனை எடுத்துக் கொடுக்கிறான். தலைவர் அதை வாங்கிக் கொண்டு கிளம்பும்போது கம்பர் வருகிறார். இருவரும் ஒருவருக்கொருவர் மோதிக்கொள்வது போலப் பார்த்துக் கொள்கிறார்கள். தலைவர் கடந்து போகிறார்.)

கம்பர் : இந்த ஆளு எதுக்காக திரும்ப வந்தாரு?

பாஸ்கரன் : பஞ்சாயத்து ஆபீசரைப் பார்க்க.

கம்பர் : அம்மாடி, ரெண்டும் சேர்ந்திட்டா உருப்பட்டாப்பிலே தான். ஜாடிக்கேத்த மூடி.

கி.அதிகாரி : இதோ பாரு, இல்லாததும் பொல்லாததும் பேசினா பாரு!

பாஸ்கரன் : ஆளை உள்ளே தள்ளுவீங்க, அவ்வளவுதானே. உள்ளே போனவன் எவனும் வெளியே வர விரும்புறதில்லே, தெரியுமில்லே?

கம்பர் : சார் வெளியேதான் கவனிச்சிக்கிடுவாரு. கவலை யில்லே.

கி.அதிகாரி : சரி, நான் போய்ட்டு வர்றேன். சங்குநாயர் எதுக்கும் வருத்தப்படவேண்டாம். ரிப்போர்ட் நான் அனுப்பிச் சிடுறேன். சரிபண்ணிடுறேன். (அப்போதுதான் நினைவுக்கு வந்ததுபோல) அடடா, ஒரு விஷயம் மறந்துபோச்சு. கொஞ்ச நாளாக, நம்ம குழந்தை களுக்குத் தூக்கத்திலே திடுக்கிட்டு அலறுகிறது ஒரு வியாதி. யானைவால் முடியைக் கையில் கட்டினால் சரியாய்ப் போகுமின்னு வைத்தியர் சொன்னார். நமக்கெங்கே இதுக்கெல்லாம் நேரம்! பெண்டாட்டி தினசரி நச்சரிக்கிறா. இப்பவாச்சும் ஞாபகம் வந்தது நல்லதாப்போச்சு. ஒரு ஏழெட்டு முடி கிடைச்சால்... (சங்குநாயர் எதுவும் பேசாமல் நிற்கிறான்.)

பாஸ்கரன் : கேட்டியா, சங்குமாமாகிட்டதான் சொன்னது.

சங்குநாயர் : கேட்டேன். இன்னிவரைக்கும் கேசவனோட ஒரு ஒத்தை முடியைக்கூடப் பிடுங்கி எடுக்கிறதுக்கு நான் சம்மதிச்சதில்லே. எங்களுக்குள்ளே ஊடல் பிணக் கெல்லாம் இருந்தாலும் அவன் என்னோட உயிரு.

பாஸ்கரன் : (எச்சரிக்கும் முறையில்) ரிப்போர்ட் சாதகமாப்

போகணுமா, வேண்டாமா? சம்பள பாக்கி கிடைக்கணுமா வேண்டாமா? சார், பிடுங்கிக் கொள்ளுங்க சார். எட்டோ பத்தோ பிடுங்கிக் கொள்ளுங்க.

கி.அதிகாரி : இல்லேயில்லே, பெண்டாட்டியோட நச்சரிப்பினாலே தான்.

கம்பர் : அதனாலே சாருக்கும் தூக்கக் கலக்கத்திலே அலறல். தூக்கத்திலே மட்டுமில்லே, முழிச்சிக்கிட்டிருக்கிறப்பவும் அதேதான். சாரோட ரெண்டு கையிலேயும் கட்டணும், நன்னாலு ஆனைமுடி. அதுக்குப் பிறகு சாரைப் பார்க்கிறப்போவெல்லாம் பெண்டாட்டி அலறுவாங்க.

(கிராம அதிகாரி முறைத்துப் பார்க்கிறார்)

சும்மா கேலிக்குச் சொன்னேன். சாரு அப்படியெல்லாம் அலறுகிற கூட்டத்தைச் சேர்ந்தவரு இல்லே.

(சங்குநாயர் மறுபக்கத்துக்கு நடந்து போகிறான்)

பாஸ்கரன் : சார், நீங்களே பிடுங்கிக் கொள்ளுங்க வேணும்கிற அளவு.

கி.அதிகாரி : அய்யோ! அப்படி வேண்டாம். நீங்களே பிடுங்கிக் கொடுங்க.

பாஸ்கரன் : சரி. நாங்களே பிடுங்கித் தர்றோம். சார் எங்களோட வாங்க. (கம்பரைப் பிடித்துக்கொண்டு) வாரும் கம்பரே, நாமே பிடுங்கிக் கொடுப்போம்.

(இருவரும் சேர்ந்து யானையின் பின்புறம் போகிறார்கள். அங்கே நின்றபடி பாஸ்கரன் கிராம அதிகாரியை அங்கு வரச்சொல்லி அழைக்கிறான்.)

கி.அதிகாரி : அந்தப் பக்கம் வந்தால் யானை தொந்திரவு பண்ணுமோ?

பாஸ்கரன் : அய்யோ பாவம்! பஞ்சமா பாவமா இது? வந்து வாலைப் பார்த்து எத்தனை முடி வேணும்னு சொல்லுங்க.

(கிராம அதிகாரி பயந்து, அருகில் சென்று யானையின் பின்பக்கம் போக நெருங்கும்போது தும்பிக்கையினால் எட்டிப்பிடித்து பைலைக் கீழே தள்ளிவிடுகிறது. கிராம அதிகாரி 'அய்யோ' என்று அலறிக் கொண்டு ஓடி

ஒரு பக்கமாகச் சென்று நிற்கிறார். பாஸ்கரனும் கம்பரும் ஓடி வருகிறார்கள்.)

சார், என்ன பயந்துட்டீங்களா? அவன் சும்மா விளையாட்டுக்காட்டினான்.

கி.அதிகாரி: விளையாட்டா இது! வாலும் வேண்டாம். தோலும் வேண்டாம். அந்த பையைத் தந்திட்டாப் போதும். நான்தானே ரிப்போர்ட் எழுதணும். அப்போ பார்த்துக்கிடுவேன். உன் குடும்பத்தையே ஒரு வழி பண்ணிடுறேன். இருக்கட்டும்!

கம்பர் : சார் பாவம்ப்பா! வால் வேணும்னாலும் அப்படியே மொத்தமாக வெட்டித் தந்திரலாம். ஏமாத்தக்கூடாது.

(பாஸ்கரன் பையைப் பொறுக்கியெடுத்து கிராம அதிகாரியின் கையில் கொடுக்கிறான். கிராம அதிகாரி எரிச்சலுடன் முணுமுணுத்துக் கொண்டு போகிறார். 'நான் யாருன்னு காண்பிக்கிறேன். அரசு ஊழியர் கிட்ட விளையாடிப் பார்க்கிறீங்களாக்கும்' என்று சொல்லிக்கொண்டு கம்பருக்குப் பின்னால் போகிறார்.)

பாஸ்கரன் : (கேசவனிடம் வாஞ்சையுடன்) வயசாகிப் போச்சு. வியாதி வந்திருச்சு. இனி இந்த வயசுக்கு மேலே வீம்பைக் குறைச்சுக்க முடியுமா? கோயில்லேருந்தும் வெளியே தள்ளிட்டாங்க. பெரிய மனுசங்க வெறுப்பை சம்பாதிச்சுக்கிட்டே. ஆனாலும்...

(வெள்ளைக் கோட்டும் ஸ்டெதஸ்கோப்பும் பையுமாக ஒருவர் நுழைகிறார். டாக்டர்.)

டாக்டர் : இதுதானே கேசவன்?

பாஸ்கரன் : வந்தாச்சு அடுத்த ஆளு! ரொம்பச் சரி. இவர்தான் மிஸ்டர் கேசவன். நீங்க?

டாக்டர் : நான் டாக்டர். நீங்க?

பாஸ்கரன் : மிஸ்டர் பாஸ்கரன். மிஸ்டர் கேசவனோட ஃப்ரெண்ட்

டாக்டர் : மாவுத்தன்?

பாஸ்கரன் : மிஸ்டர் மாவுத்தர் தடிமரம் எடுக்கப் போயிருக்கார். மிஸ்டர் கேசவனுக்கு உடம்பு சரியில்லாததனாலே மிஸ்டர் மாவுத்தர்தான் இன்னிக்குத் தடிமரம் தூக்க

*வேண்டியது. விக்கிரகத்தை மிஸ்டர் பூசைக்கார நம்பூதிரி தன் தலையிலே சுமப்பாரு.*

**விக்கிரகம் எத்தனை சுமந்தான் வாழ்க்கைக்**
**குழப்பத்தால் பேராசையால் நமது**
**கள்ள தேவதைகளின் விக்கிரகங்களைச்**
**சுமக்க எள்ளளவும் தயக்கமில்லை.**

*டாக்டர் சார் வந்த காரியம்?*

*டாக்டர் :* *கேசவனுக்கு நோயின்னு கேள்விப்பட்டேன். ஆல் கேரளா கவுன்சில் ஃபார் தி ட்ரீட்மெண்ட் ஆஃப் கேசவ...*

*பாஸ்கரன் :* *என்ன என்ன?*

*டாக்டர் :* *கேசவனுக்கு சிகிச்சை செய்வதற்கான அகில கேரள கவுன்சில். நம்ம தலைவருங்க எல்லாருமாச் சேர்ந்து உருவாக்கின அமைப்பு. அவங்க என்னை...*

*பாஸ்கரன் :* *இடதுசாரியா வலது சாரியா?*

*டாக்டர் :* *என்னது?*

*பாஸ்கரன் :* *கவுன்சில் இடது சாரியா வலது சாரியா?*

*டாக்டர் :* *ஓ, அதுவா! லெஃப்ட்டிஸ்ட்டுதான். வாரியம்தான் வலது சாரி. கவுன்சிலுக்கு மற்ற குரூப்களுடன் அலையன்சும் ஆதரவும் உண்டு. கேசவனை சோதிச்சுப் பார்க்கணும்னு கவுன்சில் என்னைப் பணிச்சிருக்கு.*

*பாஸ்கரன் :* *அப்படீன்னா கேசவன் பேரைச் சொல்லி குரூப்களும் கட்சிகளும் தங்களோட வேலையை ஆரம்பிச்சிட்டாங் களாக்கும்!*

**அப்பாவி வாழ்ந்திருந்த நாளதனில்**
**அவனுக்குத் துணைபுரியாதோர்**
**உயிர்பிரியும் தருவாயில்**
**மருந்தெல்லாம் சுமந்துவந்தார்.**

*அப்படீன்னா கேசவனுக்கு இனி மரணம்தான், இல்லையா?*

*டாக்டர் :* *என்னது?*

*பாஸ்கரன் :* *டாக்டர் வந்திட்டீங்க இல்லே. சிகிச்சை தராமல் சாக*

விடுவதென்பது ஜனநாயக நடைமுறையை சேர்ந்ததல்ல. சிகிச்சை செய்த பிறகுதான் சாகணும்.

டாக்டர் : வாழவைக்கிறதுக்காகத்தான் சிகிச்சை பண்றது.

பாஸ்கரன் : சிகிச்சை செய்கிறதுக்காகத்தான் வாழ்ந்துக்கிட்டிருக் கிறது. திருவாளர் மாவுத்தனுக்கும் சிகிச்சை தர வேண்டாமா?

டாக்டர் : சிகிச்சை தரணும். அவருக்கும் உங்களோட நோய் தான்னா தவறாம தீவிர சிகிச்சை தரணும்.

பாஸ்கரன் : எனக்கு, கேசவனுக்கு, சங்குமாமாவுக்கு, குஞ்சியம் மைக்கு எல்லாருக்கும் ஒரே நோய், ஒரே சிகிச்சை.

டாக்டர் : இவனுக்கு உங்களோட நோய்தான்னா என்னோட சிகிச்சை ஒத்துவராது.

பாஸ்கரன் : ஒத்துவராதுதான். டீக்கடைக்காரன் பரமுநாயருக் குள்ள சிகிச்சை எனக்கு. கள்ளுக்கடை மத்தாயிக்கான சிகிச்சை சங்குமாமாவுக்கு, கேசவனுக்கோ சிகிச்சையே கிடையாது.

டாக்டர் : உங்களுக்குத் தேவை மென்ட்டல் ஆஸ்பிட்டல் சிகிச்சைதான்.

பாஸ்கரன் : டாக்டரோட டயாக்னசிஸ் நூறு சதவிகிதம் சரி. மென்ட்டலாகத்தான் இருக்கும். ஃபிசிக்கலில் தொடங்கி, மென்ட்டல் வழியாகக் கடந்து, இப்போ மெட்டாஃபிசிகல்.

(டாக்டர் யானையைச் சுற்றி நடந்தபடி உற்றுப் பார்க்கிறார். டாக்டர் பேசுவதெல்லாம் யானையைப் பார்த்துக் கொண்டும், பதில் எதையும் எதிர்பாக்காத படியும் இருக்கிறது)

டாக்டர் : லத்தி எல்லாம் ஒழுங்காப் போடுதா?

பாஸ்கரன் : இல்லே. சில வருஷமா விட்டையே போடலே. கண்றாவி.

டாக்டர் : மூத்திரமாவது போகுதா?

பாஸ்கரன் : போகுது- போகுது. இவனைப் பார்க்கிறப்போ மிஸ்டர் மாவுத்தன்தான் மூத்திரம் போறாரு.

டாக்டர் : (உற்றுப் பார்த்துவிட்டு) பக்கத்திலே போனா

தொந்திரவு பண்ணுமோ?

பாஸ்கரன் : தொந்திரவு பண்றதுக்காகப் பக்கத்திலே போனால் தொந்திரவு பண்ணும். அதுவும் சமீப காலமாகத்தான். கேசவன் அகிம்சாவாதி. மாவுத்தனுக்கு அகிம்சா கவசமுண்டு, கோணிச்சாக்கு. 'அகிம்சா கவசம் என் செயும் வாளின் கொடுமுனையை மடக்கி வைக்கா விடில்?' எத்தனை உடைவாட்களின் கூர்முனைகள் இவனுடைய அகிம்சா கவசத்தில் முட்டி மோதித் திரும்பியிருக்கின்றன! ருத்ர நாராயண நம்பூதிரி, வெட்டிக்காட்டு தேவர்.

டாக்டர் : இந்தக் குழாயை உடம்பிலே வச்சுப் பார்க்கட்டுமா?

பாஸ்கரன் : அதுக்கென்ன? குழாயை உடம்பிலே வச்சுப் பார்த்தாலும் சரி, இல்லாட்டி உடம்பைக் குழாயிலே வச்சுப் பார்த்தாலும் சரி. கொஞ்ச நாள் போனால் மைக்ராஸ் கோப்தான் வச்சுப் பார்க்க வேண்டியிருக்கும். மெலிஞ்சாத்தான் சௌகரியம். (கேசவனிடம்) அசையாம இரு. பயப்படாதே. உன்னை குணப் படுத்தத்தான் வந்திருக்காரு. பொதுமக்கள் நலத்துக்காகத்தான் இவர் இருக்காரு.

(டாக்டர் ஸ்டெதாஸ்கோப்பைக் கேசவனுடைய உடம்பின் பல பகுதிகளில் வைத்து பரிசோதிக்கிறார்)

(டாக்டரிடம்) பிரச்சினை நிறைய இருக்குமோ?

(டாக்டர் அதைக் கண்டுகொள்ளாமல் சோதித்துக் கொண்டே இருக்கிறார்.) பிரச்சினை நிறைய இருக்குமோ?

டாக்டர் : வீக்னஸ் எக்கச்சக்கமா இருக்கு.

பாஸ்கரன் : இருதயத்துக்கு?

டாக்டர் : ஹார்ட்லே எந்தப் பிரச்சினையும் இல்லே.

பாஸ்கரன் : ஆனா, அதுதான் அவனுடைய வியாதியே.

டாக்டர் : எது?

பாஸ்கரன் : ஹார்ட்லே எந்தப் பிரச்சினையும் இல்லாதது.

**இரக்கமிலா இவ்வுலகத்தில் பழுதிலா**
**இருதயம் இருப்பதே ஒரு தோல்விதான்.**

டாக்டர் : உடம்பு மெலியறதும் சொறிசிரங்கும்தான் இவனோட வியாதின்னு சொன்னீங்கல்லே?

பாஸ்கரன் : வியாதி வீம்பு, ஆணவம் அப்படீன்னு நாட்டாமைக் காரரும் துடிமரத்துக் காண்ட்ராக்டர்களும் மிஸ்டர் மாவுத்தனும் சொல்றாங்க. மிஸஸ் மாவுத்தன், மிஸ்டர் கம்பர், மிஸ்டர் பாஸ்கரன் முதலியோர் அதை ஒப்புக் கொள்ளவில்லை.

(டாக்டர் சிந்தனையில் மூழ்கி சுற்றிச் சுற்றி நடக்கிறார்.)

டாக்டர் : மூச்சுத்திணறல் ஏதாச்சும் இருக்கா?

பாஸ்கரன் : அப்படி வாங்க. வியாதி என்னன்னு கண்டுபிடிச் சிட்டீங்க. எத்தனையோ வருஷமாயிடுச்சு. மூச்சுத் திணறாம அவன் ஒருநாள்கூட இருந்ததில்லே.

டாக்டர் : ரியலி! மூச்சுத்திணறல் ஏற்படுறப்போ மயக்கம் ஏதாச்சும் வருமா?

பாஸ்கரன் : மத்தவங்களுக்கு மயக்கம் வருகிறதனாலேதானே கேசவனுக்கு மூச்சுத்திணறல் உண்டாகுது.

டாக்டர் : (சிந்தித்தவாறே நடந்தபடி) மூச்சுத் திணறல் இல்லாத போது எக்சிமா வரும். எக்சிமா இல்லாதப்போ மூச்சுத்திணறல் வரும். ஹி இஸ் சஃபரிங் ஃப்ரம் அலர்ஜி.

பாஸ்கரன் : அலர்ஜின்னா ஒவ்வாமைதானே?

டாக்டர் : இந்த என்விரோன்மெண்டில் ஏதோ சிலது கேசவ னுக்குப் பிடிக்காதது இருக்கு.

பாஸ்கரன் : அப்படீன்னா ஏதோ சிலது பிடிச்சிருக்கணுமில்ல?

டாக்டர் : பிடிக்காதது எதுன்னு கண்டுபிடிக்கிறதுக்கு ப்ளட் டெஸ்ட் பண்ணணும்.

பாஸ்கரன் : ப்ளட் டெஸ்ட் பண்ணாமலேயே பிடிச்சது எதெல் லாம்னு சொல்லிடலாம். குஞ்சியம்மை—அதாவது மிஸஸ் மாவுத்தன், கடலை உருண்டை, மிஸ்டர் பாஸ்கரன், உளுந்து வடை, நாட்டுப்பழம். ஆனா, மிஸஸ் மாவுத்தனுக்கு உடம்பு சரியில்லை. கடலை உருண்டைக்குக் காசில்லை. உளுந்து வடையும் நாட்டுப்பழமும் வாங்கித் தரவழியில்லை.

(சங்குநாயர் வருகிறான்)

சங்குநாயர் : அந்த நரகவாசி, கிராம அதிகாரி போயிட்டாராடா?

பாஸ்கரன் : போயாச்சு, போயாச்சு, அந்த நரகவாசி போன பிறகு தான் இந்த மகானுபாவர் வந்திருக்கார். டாக்டராம். கேசவனுக்கு சிகிச்சை செய்ய வந்திருக்காராம்.

சங்குநாயர் : கேசவனுக்கு சிகிச்சை செய்யவா? இவருக்கு வேறே வேலை ஒண்ணும் கிடையாதா?

பாஸ்கரன் : கேசவன் உதவி வாரியத்திலிருந்து அனுப்பிச்சிருக் காங்க. என்ன நோயென்று நிர்ணயம் பண்ணியாச்சு.

சங்குநாயர் : அகம்பாவமா?

பாஸ்கரன் : அகம்பாவம்தான். இங்கிலீஷ்லே அலர்ஜின்னு சொல்லுவாங்க.

சங்குநாயர் : கள்ளுக்கு வாட்டீஸ்னு சொல்றது போல.

டாக்டர் : (நடப்பதை நிறுத்தி சங்குநாயரிடம்) சில உணவு வகைகள், வாசனை, சத்தம் இதெல்லாம் அலர்ஜி உண்டாக்கும். இவனுக்கு நெய், பூவன்பழம், திராட்சை, தேன் போன்றதெல்லாம் கொடுக்கக்கூடாது.

பாஸ்கரன் : சரியாப் போச்சு! இதெல்லாம் இல்லேன்னா இவன் வேற எதைச் சாப்பிடுவான். சார்? தங்கபஸ்பம், சித்தமகரத்வஜம் இந்த மாதிரி கொடுக்கலாமா?

டாக்டர் : சாம்பிராணி, கற்பூரம் முதலான வாசனைகளும் ஒத்துக்காது.

பாஸ்கரன் : வீராளிப்பட்டு, தங்கமாலை, பட்டுத்துணி, பழப் பிரதமன், பாயசம் இதெல்லாம் உபயோகிச்சா தப்பா?

டாக்டர் : நாதஸ்வரம் கேட்கலாம். ஆனால் செண்டமேளம் கூடாது. கடுமையான இரைச்சல் சத்தம் எதுவும் கூடாது.

பாஸ்கரன் : பேஷ்! பக்திமயமான பதங்களும் பாட்டுக்களும் மாவுத்தன் கைவசம் ஏராளமாக இருக்கு. தாதுபுஷ்டி, ஞாபகசக்தி, ரத்த அழுத்தம் இதுங்களுக்கான மருந்து?

சங்குநாயர் : அதுக்கு வேணுமானால் காலையிலும் சாயங்காலமும் கொஞ்சம் பாகவத பாராயணமும் மதப்பிரசங்கமும் கேட்க வைக்கலாம். கழுதையை.

பாஸ்கரன் : சரி, இப்போ சொன்னியே, அது போல அழகழகான, மண்வாசனையுள்ள பதங்கள் இருக்கிறப்போ பாகவதமும் ராமாயணமும் மத்ததும் எதுக்கு சங்குமாமா?

(மேடைக்குப் பின்புறம் ஜோசியர் கிட்டுப்பணிக்கரும் கம்பரும் பேசிக்கொண்டு வரும் ஒலி.)

கம்பர் : "லாட்டரிச்சீட்டு வேணுமின்னா ஒரு பகவத்கீதையும் வாங்கணும்"

பணிக்கர் : "பகவத்கீதை ஆதியிலிருந்து அந்தம்வரை நெஞ்சிலே அப்படியே இருக்கு. சங்கர பாஷ்யம் வரை மனப் பாடம்."

கம்பரும் கிட்டுப்பணிக்கரும் மேடைக்கு வருகிறார்கள். கிட்டுப்பணிக்கர் பரம்பரை ஜோசியரின் மிடுக்கும் துடுக்கும் உள்ள நடுவயதுக்காரர்.

கம்பர் : அப்படீன்னா வாத்ஸ்யாயன மகரிஷியால் எழுதப் பட்டதும் எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றுவது மான காமசூத்திரம் ஒண்ணு எடுத்துக்கலாமே?

பணிக்கர் : (கம்பரிடமிருந்து விலகிப் போக முயன்றபடி) அம்மாடி, வேணாம் வேணாம். வாத்ஸ்யாயனர், கொக்கோகம் எதுவும் வேணாம்.

கம்பர் : எல்லாமே நெஞ்சிலே இருக்காக்கும். அப்படீன்னா கண் மை, சவுரி?

பாஸ்கரன் : யாரு கம்பரே, இது?

கம்பர் : சங்குமாமாவைத் தேடி வந்திருக்காரு. கள்ளுக் கடையைச் சுத்திச் சுத்தி அலைஞ்சதைப் பார்த்து இங்கே பிடிச்சு இழுத்துக்கிட்டு வர்றேன்.

சங்குநாயர் : அப்படீன்னா என்னை அங்கேயே கூப்பிட்டிருக்கக் கூடாதா, மடையா? நாம அங்கேயே போயிடலாம், வாத்ஸ்யாயன் சாரே.

பணிக்கர் : கேசவனைப் பார்க்க வந்தேன்.

பாஸ்கரன் : புரியலையே.

பணிக்கர் : பிஷகாச்சார்யா, ஜோதிட பூஷணம் கிட்டுப் பணிக்கர்னு சொல்லுவாங்க. கேள்விப்பட்டிருப்பீங்க.

சங்கு. : கேள்விப்பட்டிருக்கலாம். கேசவனைத் தேடி வந்தது

தடிமரம் தூக்குற காண்ட்ராக்ட் விஷயமாவா, வேறே எதுவுமா?

பணிக்கர் : வைத்தியம் பண்றதுக்கு.

பாஸ்கரன் : பத்திரிகைச் செய்தியைப் பார்த்துப் புறப்பட்டீங்களாக்கும்.

(யானைக்குப் பின்னால் டாக்டரைப் பார்த்ததும் கம்பர் அங்கு செல்கிறார்.)

பணிக்கர் : அகில இந்திய கேசவ பாதுகாப்புக் கழகத்தின் வேண்டுகோளின்படி...

பாஸ்கரன் : எதனுடைய?

பணிக்கர் : அகில இந்திய கேசவ பாதுகாப்புக் கழகம். அவங்களோட வேண்டுகோளின்படி கேசவனைப் பரிசோதிக்க வந்திருக்கேன்.

பாஸ்கரன் : இடதா, வலதா?

பணிக்கர் : இடதும், வலதும் முன்னும், பின்னும்.

சங்குநாயர் : மக்குசார், பாசுகரன் கேட்டது வலதுசாரிக் கட்சியா இடதுசாரிக்கட்சியா அப்படீன்னு. என்னப்பா பாசுக்கரா?

பாஸ்கரன் : ஆமாம், இடதா வலதா?

பணிக்கர் : நடுநிலைமை, இடதுசாரியும் இல்லே, வலதுசாரியும் இல்லே. அதாகப்பட்டது, பார்வை ரெண்டு பக்கமும் தான் இருக்கு. (கண்ணாடியை நெற்றி மீது ஏற்றி வைத்துக்கொண்டு யானையின் மத்தகத்தை உற்று நோக்கியவாறு இருக்கிறார்.)

(யானையின் பின்னால் கம்பரும் டாக்டரும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.)

கம்பர் : "கொடியேற்றத்துக்கு தாராளமான வெகுமதி ஏதாச்சும் உண்டா?"

டாக்டர் : "நல்ல ஃப்ரெஷ் ஏர் கிடைக்கிற இடமா வேணும் இவனைக் கொண்டுபோய் நிறுத்தறதுக்கு."

கம்பர் : "லாட்டரிசீட்டு, தேர்தல் அறிக்கை, பிண்டத் தைலம்."

டாக்டர் : "ஸ்டமக் வாஷ் கொடுத்து முடிச்ச பிறகுதான்

மெடிசின் கொடுக்கணும்."

(குரல் கேட்டு கிட்டுப்பணிக்கர் உள்ளே உற்றுப் பார்க்கிறார்.

பணிக்கர் : யாரது, யானையைப் பரிசோதிக்கிற மாதிரித் தெரியுதே.

பாஸ்கரன் : டாக்டராக்கும்.

பணிக்கர் : உருப்பட்டாப்பலதான்! இந்த நவீன விஞ்ஞானமும் தொழில்நுட்ப விவகாரங்களும் எதுவும் இங்கே பலிக்காது.கோயில் யானை என்கிறதனாலே ஜோசியம் பார்த்துத் தெரிஞ்சிக்கிட்டுதான் வைத்தியத்தைத் தொடங்கணும். அதனாலேதான் வேத முறைப் படியான வழிமுறைகளிலே வல்லவர்களான கழகத் தார்கள் என்னை இங்கே அனுப்பி பொறுப்பை ஒப்படைச்சிருக்காங்க. ஒரு தடவை ஜோசியம் பார்த்திட்டு வைத்தியம் பண்ணலாம். (மேடைத் திண்டில் உட்கார்ந்து சோழிகளை உருட்டுகிறார்.)

சங்குநாயர் : குஞ்சம்மைக்கு நெஞ்சுவலி வந்து அஞ்சு வருசமாச்சு. இவனோட சேர்த்து ஒரு கழகத்தை உருவாக்கி அவளுக்கு சிகிச்சை தர முடியாதா?

பாஸ்கரன் : பத்திரிகையிலே செய்தி எதுவும் வரலையே. நம்ம நிருபர் சு.ம. வரட்டும் எழுதச் சொல்லுவோம்.

சங்குநாயர் : அய்யோ! அந்த ஆளுகிட்ட சொல்ல வேணாம். நெஞ்சு வேதனைன்னு சொன்னா உடனே அவரு எழுதுவாரு—மாவுத்தன் ராப்பகலா அவளோட உடம்பை வாட்டி வதைச்சதனாலே பெண்டாட் டிக்குக் காசநோய் வந்ததுன்னு. அதுக்குப் பிறகு நாம வெளியே தலைகாட்ட முடியாது. (டாக்டர் மேடைக்கு வருகிறார். பின்னாலேயே கம்பரும்)

டாக்டர் : காலையிலே கொஞ்சம் லைம் ஜூஸ். ஒரு இருபது எலுமிச்சம்பழத்தோட சாறுலே வெந்நீர் கலந்து கொடுக்கணும்.

சங்குநாயர் : கெட்டிக்காரரு! இவரு பரவாயில்லே! நல்ல புளிப்புச் சாறு கொடுத்தா அகம்பாவம் குறையும். ஒத்துழைக்க லேன்னா என்ன தண்டனை? புளியைத் திணிக்க வேண்டியதுதான். அடி வாங்கி, புளி தின்னு,

கைகொடுத்தான்னு கேள்விப்பட்டதில்லையா? டாக்டரே, எலுமிச்சை இல்லே, நல்ல காட்டமான நாட்டுப்புளி கொடுக்கணும். அடி வாங்கிக்கிட்டு புளியைத் தின்னு நல்லா மரத்தை இழுக்கணும் கஸ்மாலம்.

*(டாக்டர் உள்ளே போகிறார். கம்பர் சோழி புரள்வதைப் பார்த்தபடி நின்றுகொண்டிருக்கிறார். புரண்டு சிதறிப் பரவிய சோழிகளை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறார் கிட்டுப்பணிக்கர்.)*

பணிக்கர் : "பூத பிரேத பிசாச தர்சனவசா துரோகம் ஸமேதி த்ருவம்" என்கிறது லக்ஷணதீபிகை என்கிற சாஸ்திர நூல். பூத பிரேத பிசாசுகளைப் பார்த்து பயந்ததனாலே இப்படி ஆயிருக்கு.

பாஸ்கரன் : பூத பிரேத பிசாசுகளையெல்லாம் எத்தனையோ வருஷமா, பாவம், பார்த்துக்கிட்டுதானே இருக்கு. சரீர சக்தி குறைஞ்சதனாலே பயம் அதிகரிச்சிருக்கு.

*("இன்னிக்கு ஒண்ணுக்கு மேலே சேர்ந்தாப்பிலே மூணுநாலு பார்த்தாச்சு. இதிலே ஒண்ணைப் பார்த்தாப் போதும் நம்ம வியாபாரம் முடிக்க. அப்படியிருக்க இவனோட விஷயம் சொல்லணுமா?" என்று சொல்லிக்கொண்டே கம்பர் எதிர்ப்பக்கத்திற்கு நடந்து போகிறார்.)*

பணிக்கர் : செவ்வாய் லக்னத்திலே இருக்கு. எட்டாம் இடத்தானுக்கு பலமில்லாதாக்கும், நாலாம் இடத்தானும் ஆரோக்கியகாரனுமான புதன் பகை ஸ்தானத்திலே இருக்கான்—இப்படியெல்லாம் இருக்கிறப்போ அஜீர்ணம், குன்மம் முதலானவை உண்டாகும்.

**"அஜீர்ணி குன்மாமயமூலமேதி**
**கஜே விலக்னே விபலோரி நாதே"**

என்கிறது ப்ரமாணம். தெய்வக் கோபம் ஏராளமாக இருக்கு. பக்கத்திலே போகலாமா?

பாஸ்கரன் : ஜாதகப்படி அகால மரணம் இல்லேன்னா போகலாம்.

பணிக்கர் : கிண்டல் பேர்வழிகளா இருக்கீங்க ரெண்டுபேரும்.

*(யானையின் மத்தகத்தை நோக்கி நின்றுகொண்டு)*

"ஜாதோ புக்திவிரோகரோகரஹிகோ
ரந்த்ரேச்வரேர்துர்பலே
லக்னே பாபநிரீக்ஷிதே பரிப—
வஸ்த்தானே ஸமந்தேக்ஷிதே
வாதப்ராந்திஜபாண்டுமேதி ஸ கஜே
சந்த்ரே ரிபுஸ்த்தானயோ
ஜாத: தூலவிஸர்ப்பமேதி தினக்ரு—
ச்சந்த்ராரயுக்தே யதா."

பிறைசூடியின், அதாவது சிவனின், கோபம் ஏராளமா இருக்கு.

வாதம், சொறிசிரங்கு முதலானதுகளுக்கு அது காரணம்னு இந்த வடமொழி சுலோகம் சொல்லுது.

(டாக்டர் வெளியே வருகிறார்)

டாக்டர் : பச்சைத் தண்ணியிலே குளிப்பாட்டக்கூடாது. வெந்நீரிலே பொட்டாசியம் பெர்மாங்கனேட் கலந்து தேய்ச்சுக் குளிப்பாட்டணும்.

சங்குநாயர் : கொஞ்சம் பன்னீரும் சந்தனமும் கலந்துக்கிடலாமா? அடடா, அதுஇதுன்னு தேவையில்லாத தொந்திர வெல்லாம் வருது நம்ம தலைக்கு. (டாக்டர் உள்ளே போகிறார்.)

பணிக்கர் : இவன்மேலே தெய்வக்கோபம் ரொம்ப இருக்கு.

சங்குநாயர் : ஆமா, இவர் சொல்றதுதான் சரி. எத்தனை எத்தனை தெய்வங்களைத் தலைகீழாகக் கவிழ்த்தியிருக்கான் தரையிலே! அடங்காப்பிடாரி மேலே எப்படி தெய்வக் கோபம் வராம இருக்கும்?

பணிக்கர் : அப்படீன்னா நான் சொன்னது சரிதான், இல்லே? ஜோசியம் என்றைக்கும் பொய்க்காது.

பாஸ்கரன் : அதில்லே. விக்கிரகத்தைக் கீழே கவிழ்த்தறதுக்கு முன்னாலே தெய்வ அனுக்கிரகம் ஏராளமா இருந்தது. ஏழெட்டுப்பேர் மேலே ஏறியிருந்துக்கிட்டு ஆலவட்டம் வெண்சாமரம் வீசிக்கிட்டு அவனோட இடுப்பை ஒடிச்சாங்க இல்லே. அதுதான் அவனுக்கு வாய்ச்ச தெய்வாதீனம்.

டாக்டர் : (எழுதுவதற்கிடையில்) அலர்ஜியும் எக்ஸிமாவும்

சேர்ந்திருக்கிற காம்பிளிகேஷன் ஆனதாலே...

பணிக்கர் : (குறுக்கிட்டுச் சொல்கிறார்) நீரிழிவு, குன்மம் முதலானது வர்றதுக்கு இன்னொரு காரணமும் இருக்கு. சுக்கிரன் சமக்ஷேத்ரத்திலே இருக்கிறான். அதனோட பலன் என்ன? இந்த சுலோகத்திலே சொல்லியிருக்கு.

**"ஸமர்க்ஷகஸ்யாபி ஸிதஸ்யதாயே**
**ப்ரமேஹ குன்மாக்ஷி குதப்ரரோக:**
**கிஞ்சித் ஸுகம் பூபதி வஹ்னி சோரைர்**
**பயம், ஸ்வநாமாங்க்கிதகத்யபத்யம்."**

நீரிழிவு, குன்மம், மூலம், சுகநாசம், ராஜா மேலே பயம்—ஜனநாயகத்திலே ராஜான்னு சொன்னால் சட்ட நிபுணர்கள், நாட்டாமை அப்படீன்னு வச்சிக் கணும்—அவங்களோட மனக்கசப்புக்கு ஆளாகிற தாலே வர்ற கஷ்டநஷ்டங்கள்—இதெல்லாம் அனு பவிச்சாகணும். அது மட்டுமில்லே, 'ஸ்வநாமாங்க்கித கத்யபத்யம்' இவனுடைய பேர் சொல்லும் உரைகளும் பாட்டுக்களும் உண்டாகும். அதுதான் பார்க்கிறோமே பத்திரிகைச் செய்திகள், கட்டுரைகள் எல்லாம் வெளிவர்றதை, அவனைப் பத்தி. இனி காவியங்களும் நாவல்களும் வரும் அளவில்லாமல்.

சங்குநாயர் : இந்த வாத்ஸ்யாயனன் சார் அவ்வளவு மோசமில் லேடா பாசுகரா! சார், இதோ நின்னுக்கிட்டிருக்கிற பாசுகரன்கூட பாட்டும் உரையும் கலந்த கதா காலட்சேபம் எழுதியிருக்கான் கேசவனைப் பத்தி.

பாஸ்கரன் : ஆனால் மகத்தான கட்டுரைகளும் பாட்டுக்களும் எல்லாம் இனிமேதான் வெளிவர இருக்கு. நாட்டா மைக்காரருடைய ஆதிக்கம் முடிஞ்சு கேசவனுக்கு விடுதலை கிடைக்குமா அல்லது கேசவன் செத்துரு வானான்னு தெரிஞ்சிக்கிறதுக்காக நிருபர்களும் எழுத்தாளர்களும் காத்திருக்காங்க. விடுதலை கிடைக் காமல் கேசவன் போய்ச் சேர்ந்துட்டா நாட்டாமைக் காரரோட வெற்றி வாகை; நாட்டாமைக் காரரோட ஆதிக்கம் முடிவுக்கு வந்துட்டா கேசவனோட வெற்றி வாகை. இதில் எது நடந்தாலும் கட்டுரை கவிதைகள் ஏராளமாக வெளிவரும் அவன் பேரிலே.

பணிக்கர் : (திடீரென்று ரகசியத்தைக் கண்டுபிடித்ததுபோல் குறுக்கிட்டுப் பேசுகிறார்.) அப்படி வா! எப்படி கட்டுக்குள் அடங்காம இருக்கும்? புதன் மூணாம் ராசியிலேயாக்கும் இருக்கு.

**"சிந்த்தா வ்யாகுலதா த்ரிதோஷஜனிதா**
**ரோகோ பலாத் பந்தன**
**வ்யாபத் க்லேசபரம்பரா பரிபவ**
**ஸர்வஸ்வ ஹாத்யா ம்ருதி."**

பொருத்தம்னா, இதுல்ல பொருத்தம்!

பாஸ்கரன் : புரியலையே.

பணிக்கர் : எப்படிப் புரியும்? தேவபாஷையைப் பிடுங்கி எறிஞ்சிட்டு அசுர பாஷைக்குப் பின்னாலே போறவங்க கதி இதுதான். கலாச்சார நசிவு! புதன் மூணுக்கு மாறும் போது—புதன் யாரு? கல்வி, புத்தி, புரியுதா? புத்தியும் படிப்பும் இருக்கிறவங்களுக்கு சிந்தனைக் குழப்பம், மனத்தடுமாற்றம், மூன்று வகையான தோஷங்களிலிருந்து பிறப்பெடுக்கும் வியாதிகள், பலாத்காரத் தொடர்பு, கொலை, மரணம் இதெல்லாம் சம்பவிக்கும்.

பாஸ்கரன் : பொருத்தம்னா பொருத்தம்தான். புத்தியும் விவேகமும் இருக்கிறவங்களுக்குத்தான் இந்த சங்கடங்களெல்லாம் வருதுங்க. அவங்களுக்கு சிந்தனை என்கிற வியாதி வந்தால் காரியம் ஆபத்துதான். சும்மா இல்லாம தன்போக்கிலே சிந்திக்கிற கேசவனுக்கு பணிக்கர் வாத்தியார் சொன்ன பாஷையிலே சொன்னால் சிந்தனைக் குழப்பம் உண்டாயிருச்சு.

பணிக்கர் : "த்ரிதோஷ ஜனதா ரோகோ." த்ரீ தோஷம்னு சொன்னா வாதம், பித்தம், கபம் இதுங்களோட தாக்கத்தினாலே உண்டாகிற ரோகம்.

பாஸ்கரன் : த்ரிதோஷம் வாதம் பித்தம் கபம் என்கிற காலமெல்லாம் போயிருச்சு வாத்தியாரே. இப்போ த்ரிதோஷம்னு சொன்னா வர்க்கம், வர்ணம், வம்சம் இதுங்களோட தாக்கம்தான். வர்க்கம்—அதாவது பொருளாதார அடிப்படையிலான ஏற்றத்தாழ்வு, வர்ணம்—அதாவது ஜாதிமத அடிப்படையிலான

ஏற்றத்தாழ்வு, வம்சம்—அதாவது, உற்றார் உறவினர் அடிப்படையிலான ஏற்றத்தாழ்வு—இதுங்களிலிருந்து உருவாகும் வியாதி—அதாவது கோபம், நிராசை, நினைவுத் தடுமாற்றம்—அதுங்க காரணமாக அடிமைத்தனம், மனத்துயரம், கொலை, மரணம். இப்போ அடிமைத்தனம், மனத்துயரம் இதுங்க வரைக்கும் வந்தாச்சு.

பணிக்கர் : மனசுக்குத் தோணினதையெல்லாம் வியாக்கியானம் பண்றீங்க. ஆனால் நான் கிரந்தத்தில் படிச்சதும் குருநாதர் அருளிச்செய்ததும் மட்டுமே சொல்றேன். புதிய கிரந்தங்களும் புதிய குருநாதர்களும் சொல்றதை நீங்க மட்டும் புரிஞ்சிக்கிட்டாப் போதும்.

பாஸ்கரன் : ரெண்டு வழியாப் போனாலும் போய்ச் சேர்றது ஒரே இடம்தான். 'த்ரிதோஷஜனிதா ரோகோ' மனத்துயரம், கொலை, மரணம்.

(டாக்டர் வெளியே வருகிறார்.)

டாக்டர் : இவனுடைய மூக்கிலே தூசி போயிடாம பார்த்துக்கணும். ரொம்ப கவனமா இருக்கணும்.

சங்குநாயர் : (உரக்கச் சிரித்து) கிறுக்கு! யானையோட மூக்கிலே தூசி போகக் கூடாதுங்கறாரு. புழுதி வாரித் தலையிலே போட்டுக்கிடுறதுதானே இதுங்களோட பழக்கம். அதிலேதானே இதுங்களுக்குப் பரமானந்தம். நம்பிக்கை இல்லேன்னா இந்த வாத்ஸ்யாயன சார்கிட்ட கேட்டுப்பாருங்க.

பணிக்கர் : (அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறார்) தெய்வக் கோபத்துக்கு உடனடியாகப் பரிகாரம் பண்ணியாகணும். சிவாலயங்களில் ஆயிரம் பிராமணர்களுக்கு சத்ய போஜனம். வைணவக் கோயில்களிலே குடமுழுக்கு. அம்மன் கோயில்களிலே பறவைக்காவடி.

டாக்டர் : ஆரஞ்சுச் சாறிலே குளுகோஸ் கலக்கிக் கொடுக்கணும். ஒரு நேரத்துக்கு அம்பது ஆரஞ்சு, ரெண்டு கிலோ குளுகோஸ்.

பணிக்கர் : (பிடிவாதத்துடன்) பன்னிரண்டு நாள் கணபதி ஹோமம்.

டாக்டர் : (பிடிவாதத்துடன் தும்பிக்கை அருகாகப் போய் நின்று கொண்டு) பெனிசிலின் மாத்திரை முப்பத்திரண்டு.

பணிக்கர் : (தும்பிக்கையின் மறுபக்கம் போய் நின்றுகொண்டு) துர்க்கா மந்திர ஜபம், விருஷப தானம்.

டாக்டர் : ஸ்ட்ரெப்டோமைசின் இன்ஜெக்ஷன்.

பணிக்கர் : சூனியம் வச்சு எடுக்கிற சர்ப்பப் பாட்டு.

டாக்டர் : வாட்டர்பரீஸ் காம்பவுண்டு.

பணிக்கர் : மிருத்யுஞ்சய ஹோமம்.

டாக்டர் : மல்ட்டிவிட்டமின் டேப்லட்ஸ்.

பணிக்கர் : ஏழு நாட்களுக்கு ராமாயணம், பாகவதம் பாராயணம்.

டாக்டர் : க்ளோரோமைசிட்டின்

பணிக்கர் : சிவசகஸ்ரநாமம்

டாக்டர் : டெராமைசின்.

பணிக்கர் : எள் வார்த்து ஹோமம்.

டாக்டரும் பணிக்கரும் : (ஒரே சமயத்தில்) ஆம்பிசிலின்,
ரத்த ஹோமம்,
ஸ்ட்ரேப்ட்டான்,
அரநாழி.

(கேசவன் ஒரே நிமிடத்தில் இருவரையும் சேர்த்துப் பிடித்துத் தும்பிக்கையால் உள்ளிழுக்கிறது. 'அய்யோ' என்ற அலறலுடன் இருவரும் யானையின் வாயின் உள்புறம் சென்று மறைகிறார்கள். பாஸ்கரனும் சங்குநாயரும் ஸ்தம்பித்து நிற்கிறார்கள். சிறிது நேரம் கழித்து பாஸ்கரன் கேசவனை உற்றுப் பார்த்தபடி.)

பாஸ்கரன் : சங்கடமாயிருச்சே கேசவா, வயசுக் காலத்திலே மனுசனைக் கொல்றவன்னு பேரு வாங்கிட்டியே.

(அதுசரிதான் என்று ஒப்புக்கொள்வதுபோல் கேசவன் நிதானமாகத் தலையாட்டுகிறது.)

ஆனாலும் இப்படி நடக்கும்னு நினைக்கவே இல்லே. விழுங்கித் தொலைக்குமென்று கேள்விப் பட்டதுகூட இல்லே. (சங்குநாயருக்கு அருகில் சென்று) சங்குமாமா, இனி கவலைப்பட்டு என்ன செய்ய? நடந்தது

நடந்தாச்சு. சமாதானப்படுத்திக்குங்க.

(கம்பர் பெருமூச்சு விட்டபடி பதறிக்கொண்டு ஓடி வருகிறார்.)

கம்பர் : என்னாச்சு? என்னமோ ஒரு சத்தம் கேட்டதே?

பாஸ்கரன் : கேசவன் ஒரு தப்பு பண்ணிட்டான். அந்த டாக்டரையும் ஜோசியரையும் இழுத்துப் பிடிச்சி விழுங்கிட்டான்.

கம்பர் : அய்யோ, நாசமாப் போச்சு! இனிமே இது கேசா மாறிடுமே, வாத்யாரே, போலீசு, துப்பாக்கி, வெடி குண்டு எல்லாமே வந்திருமே. ஆனாலும் இப்படிச் செஞ்சது தப்புத்தான்.

பாஸ்கரன் : தப்பா சரியா அது பின்னாலே முடிவாகட்டும், கம்பரே. சங்குமாமா, இப்போ ஒண்ணும் பண்றதுக் கில்லே. இனிமே வருத்தப்பட்டு என்ன பிரயோசனம்?

(பின்னாலிருந்து 'யாருடா அங்கே' என்றொரு கேள்வி, உரத்த குரலில்.

பாஸ்கரன் : (திரும்பிப் பார்த்து) யார் அது?

(உள்ளேயிருந்து டாக்டரின் குரல்) "நான்தான், டாக்டர்தான்."

பணிக்கர் : "நானும் இருக்கேன், ஜோசியர்."

பாஸ்கரன் : எங்கே இருக்கீங்க?

டாக்டர் : "யானையோட வயித்திலே."

சங்குநாயர் : (திகைத்து) என்ன, யானையோட வயித்திலேயா? செத்தாச்சா?

டாக்டர் : "இல்லே, நான் இப்போ யானையோட வியாதிக்கான காரணத்தைக் கண்டுபிடிச்சிக்கிட்டிருக்கேன். கேசவனோட வியாதி அலர்ஜியில்லே, பசிதான்; எத்தனையோ வருஷமாச்சு அவனுடைய வயித்துக்கு ஆகாரம் போய்! பசியை சரிபண்ணிட்டா வியாதி தீர்ந்திரும். பசியைத் தீர்க்கலேன்னா இனிமேலும் அவன் ஆளுங்களை விழுங்குவான். இந்த உண்மையை மதிப்புக்குரிய பொதுமக்களுக்கு எடுத்துச் சொல்லுங்க.

பாஸ்கரன் : (முன் நோக்கி நடந்து, அவையோரின் அருகே சென்று).

மதிப்புக்குரிய பொதுமக்களே, கேசவனுடைய வியாதி பசிதான் என்பதாக, கொஞ்சம் தயக்கம் காட்டினாலும்கூட, நவீன விஞ்ஞானம் கண்டுபிடிச்சிருக்கு. பசியைத் தீர்த்தால் வியாதி தீரும். இல்லையானால் விஷயம் மேலும் மோசமாயிரும். மதிப்புக்குரிய பொது மக்களையெல்லாம் அவன் விழுங்கித் தீர்ப்பான்.

பணிக்கர் : "எனக்கும் ஒரு உண்மையைச் சொல்லிடணும் போல இருக்கு."

பாஸ்கரன் : யார் அது?

(கிட்டுப் பணிக்கரின் குரல்) "ஜோசியன். கேசவனோட வியாதி தெய்வக்கோபமில்லே. பசிதான். நல்ல பசி. பசிக்கொடுமையிலிருந்து குரோதமும், குரோதத்திலிருந்து பழிவாங்குற எண்ணமும், பழிவாங்குற எண்ணத்திலிருந்து கொலை பண்ணணும்கிற சிந்தனையும் பிறப்பெடுக்கின்றன. இதற்கெல்லாம் மூலகாரணமான பசிக்கொடுமை இல்லாமல் ஆக்கினால் வியாதி தீரும். காலா காலத்திலே மாற்று நடவடிக்கை எடுக்கலேன்னா கொலை பண்ற சிந்தனை அதிகரிச்சிக்கிட்டே இருக்கும் என்கிறது தான் பலன் அப்படீன்னு சொல்லி மெய்யன்பர்களுக்கு விவரத்தைத் தெளிவுபடுத்துங்க."

பாஸ்கரன் : பெரியோர்களே, கேசவனோட வியாதிக்குக் காரணம் தெய்வக் கோபமல்ல. பசிதான். கொஞ்சம் தாமதித்துத் தான் என்றாலும் வேதசாஸ்திரக் கலாச்சாரமும் இதைக் கண்டு பிடிச்சிருக்கு. விஞ்ஞானமும் கலாச்சாரமும் கடைசிலே கண்டுபிடிச்சது ஒரே உண்மையைத்தான். அடிமைத்தனத்திலிருந்து விடுதலை கிடைக்க வேண்டுமானால் பசியை விரட்ட வேண்டும் என்பதுதான் அதற்கான ஒரேயொரு எதிர் நடவடிக்கை...

(மேடைக்குப் பின்னால் ஏதோ விழும் ஓசை.) என்ன, என்ன அங்கே?

குரல் : (டாக்டரும் கிட்டுப்பணிக்கரும்) :
"நாங்கதான். டாக்டர், ஜோசியர். எங்களை அவன் விடுவிச்சிட்டான்."

பாஸ்கரன் : எவனுக? டாக்டரும் ஜோசியருமா!

குரல் : (டாக்டரும் கிட்டுப்பணிக்கரும் ஒருமித்து) "எங்களை அவன் விடுவிச்சிட்டான், பின்பக்கமாக."

சங்கு. : என்ன, விட்டுட்டானா? இனிமே கேசவன் மேலே கேஸ் எதுவும் இல்லேல்ல?

கம்பர் : லத்தியோடு ரெண்டு பேரும் சேர்ந்து விழுந்தாங்க.

பாஸ்கரன் : அப்படீன்னா இங்கே சீக்கிரமா வரணும். பொது மக்கள் காத்திருக்காங்க.

கம்பர் : அயல்நாட்டுப் பயணம் முடிச்சிட்டு வர்றாங்கல்ல! சீக்கிரமாக வாங்க.

சங்குநாயர் : இனிமே கேசவன் பேரிலே கேஸ் இல்லேதானே?

குரல் : "எங்களுக்கு வர முடியலே."

பாஸ்கரன் : வரமுடியலையா? ஏன்?

டாக்டர் : "பிறந்த மேனியா இருக்கோம்."

பணிக்கர் : "அம்மணமா."

சங்கு. : நான் சொன்னேனில்ல, அவன் யாரையும் தொந்திரவு செய்ய மாட்டான்னு.

பாஸ்கரன் : பிறந்த மேனியான்னா வர வேண்டாம்.

கம்பர் : இந்தப் பக்கம் வந்திர வேண்டாம்னு சொல்லுங்க, வாத்யாரே.

சங்குநாயர் : நீங்க எதுவும் பேசாம இருங்க கொஞ்சம். நான் போய்க் கொஞ்சம் பார்த்திட்டு வர்றேன். (பின்பக்கமாகச் சென்று எட்டிப் பார்த்து உரத்துச் சிரிக்கிறான்.) கண்ணை மூடிக்கோடா, பாசுக்கரா, பிறந்த மேனியா வெண்மணித்திருமேனி சொன்னதுபோல நின்னுக் கிட்டிருக்காங்க.

குரல் : "நாங்க அங்கே வரணும்."

கம்பர் : வரக்கூடாதுன்னு சொல்லலே?

சங்கு. : நில்லுங்க. நில்லுங்க. குஞ்சியம்மை வந்து தொலைக்கப் போறா இந்த சமயத்திலே.

குரல் : "எங்களுக்கு வந்தாகணும். நாங்க வருவோம்."

பாஸ்கரன் : வரட்டும், இருங்க ஒரு நிமிஷம். மதிப்பிற்குரிய

பொதுமக்களே,அவங்க ரெண்டுபேரும் நீங்க பார்க்கத் தகுந்த நிலைமையிலே இல்லே. அதனாலே திரையைப் போடுறோம். (இருபுறமும் நோக்கி) திரை, திரையைப் போடுங்க வேகமா, திரை.

(திரை இறங்கத் தொடங்குகிறது. "நாங்க வருவோம்", "வரக்கூடாது." "வருவோம்" என்று தர்க்கம் நடந்து கொண்டிருக்கும்போது திரை இறங்குகிறது. அவர்கள் நிர்வாணமாக மேடைக்கு வந்ததைத் தெரிவிக்கும் விதமாக அமைகிறது சங்குநாயருடைய, கம்பருடைய உரத்த சிரிப்பொலி.)

— திரை —

Lasertypeset at Capital Creations, New Delhi and
printed at Impress Offset, NOIDA